உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 11 | அக்ஷயஸு ஆனிமீ ௧உ | 1926ஸு ஜூன்மீ 15உ | பகுதி 12

## கடவுள் வணக்கம்.

பொய்யினேன் புலையினேன் கொலையினே னின்னருள்
புலப்பட வறிந்து நிலையாப்
புன்மையேன் கல்லாத தன்மையே னன்மைபோற்
பொருளலாப் பொருளை நாடும்
வெய்யனேன் வெகுளியேன் வெறியனேன் சிறியனேன்
வினையினே னென்றென் னைநீ
விட்டுவிட நினைவையேற் றட்டழிவ தல்லாது
வேறுகதி யேது புகலாய்
துய்யனே மெய்யனே யுயிரினுக் குயிரான
துணைவனே யிணையொன் றிலாத்
துரியனே துரியமுங் காணு வதீதனே
சுருதிமுடி மீதிருந்த
ஐயனே யப்பனே யெனுமறிஞ ரறிவைவிட்
டகலாத கருணை வடிவே
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மான பரமே. (1)

எனக்கெ னச்செயல் வேறிலை யாவுமிங் கொருநின்
தனக்கெ னத்தகு முடல்பொரு ளாவியுந் தந்தேன்
மனத்த கத்துள வழுக்கெலா மாற்றியெம் பிரானீ
நினைத்த தெப்படி யப்படி யருளுத னீதம். (2)

உளவ றிந்தெலா மின்செய லாமென வுணர்ந்தோர்க்
களவி லானந்த மளித்தனை யறிவிலாப் புன்மைக்
களவு நாயினேற் இவ்வண மமைத்தனை கருத்துத்
தளருந் தன்மையிங் காரொடும் புகலுவேன் தக்கோய். (3)

## அரும்பொருள் விளக்கம்.

1. ஆன்மா இறைவனை யடைவதற்கு இரண்டு மார்க்கங்களுண்டு. அவை மர்க்கட நியாயம், மார்ச்சால நியாயம் என்பனவாம். மர்க்கட நியாய மாவது தாய்க்குரங்கிற்கும் அதன் குட்டிக்குமுள்ள சம்பந்தம்போல்வது. எவ்வாறு குரங்குக் குட்டியானது தானே விழிப்பாயிருந்து தன் தாய் மர முதலியவற்றிலேறும்போதும் இறங்கும்போதும் அதன் வயிற்றை விரைந்து பற்றிக்கொள்கின்றதோ அவ்வாறு ஆன்மா தன் முயற்சியினாலேயே இறைவனை அடைதலாம்.

மார்ச்சால நியாயமாவது பூனைக்கும் அதன் குட்டிக்குமுள்ள சம்பந்தம் போல்வது. அதாவது தாய்ப்பூனையே தன் குட்டியைப் பாதுகாக்கச் சிரத்தை யெடுத்துக்கொள்ள வேண்டுமே யல்லது குட்டியால் ஆவதொன்று மின்றாம்.

இதுபோலவே இறைவனே ஜீவான்மாவைத் திருத்தி யாட்கொள்ளத் திருவுளங்கொண்டு திருவருள்புரியவேண்டும். இன்றேல், நின்றவா நில்லா நெஞ்சினைக் கொண்ட ஜீவான்மாவின் கதி அதோ கதியே.

ஆதலின் இப்பாடலில் ஆசிரியர் தம்மிடத்துள்ள குறைகளை எடுத்துச் சொல்லி "இறைவனே! தேவரீர் கருணை வடிவினர்; அடியேன் அபக்குவி-அபக்குவி யென்று அடியேனைக் கைவிடலாகாது; அடியேனைத் துன்ப சாகரத்தினின்றும் தூக்கியருளவேண்டுமென்று நான் எங்கும் நிறைந்துள்ள தேவரீரை நோக்கி, சிற்சில சமயங்களில் விண்ணப்பித்துக்கொள்வதை அறிந்திருக்கிறீர்; ஆகவே மார்ச்சால நியாயமாய் என்னைத் தடுத்தாட்கொள்ளவேண்டும்" என்று பிரார்த்திக்கிறார்.

இந்த இடத்தில்,

"மந்திக் குருளையொத் தேனில்லை; நாயேன் வழக்கறிந்துஞ்
சிந்திக்குஞ் சிந்தையை யானென்செய் வேன்எனைத் தீதகற்றிப்
புந்திப் பரிவிற் குருளையை யேந்திய பூசையைப்போல்
எந்தைக் குரியவன்காண் அத்தனேகயி லாயத்தனே"

என்று பட்டினத்தடிகள் கூறியது கவனித்தற் குரியது.

புலையினேன் = புலால் உண்ணுதலை யுடையேன்.
புலப்பட = வெளிப்பட.
நிலையா = நிலைத்திராத.

'நன்மைபோல் பொருளலாப் பொருளை நாடும் வெய்யனேன்'— இறைமைக் குணங்களில்லாதவரை அவை முற்றும் உடையரெனக் கருதிப் புகழும் புகழ் பொய்ப்புகழ் என்பதை புணர்ந்தும் அப் பொய்ப்பொருளை நன்மைபோலெண்ணி விரும்பும் கொடுங்குண முடையவனா யிருக்கின்றேன். (பொருள் அல்லா = மெய்ம்மை யல்லாத).

வெகுளி=கோபம்.
வெறி=பைத்தியம்.
தட்டழிதல்=தடுமாறுதல்.
தூய்யன்=பரிசுத்தன்.
இணை=சமானம்.
துரியம்=அவத்தை ஐந்தனுள் ஒன்று. (சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம்.)
அதீதன்=எட்டாதவன்.
சுருதி=வேதம்.

2. "என்று நீ அன்று நான் உன் அடிமை" என்று இவ்வாசிரியரே மற்ரோரிடத்தில் கூறுகிறபடி பரமாத்துமா ஒருவரே சுதந்திரமுடையவரென்பதும், ஜீவாத்துமா என்றும் அப்பரமாத்துமாவிற்குப் பரதந்திரமே (அடிமையே) என்பதும் புலனுவதால், அந்தக் கருத்தையே யொட்டி 'எனக்கென்று ஒருசெயலு மேற்படாதவண்ணம் எல்லாவற்றையும் தேவரீரே நடத்துகின்றீர்; இவ்வுண்மை புணராதார் செயலின் கர்த்தத்துவத்தைத் தம்மீதேற்றிக்கொண்டு அதன் பயன் நல்லதாயின் சந்தோஷிப்பதும், தீயதாயின் விசனித்து இறைவனுகிய தேவரீரை நிந்திப்பதுமா யிருக்கின்றனர்; இது தவறேயாதலின் நான் எனது உடல், பொருள், ஆவியாகிய மூன்றையும் தேவரீருக்கே ஒப்புவித்துவிட்டேன். என் மனத்தின்கண் உள்ள களங்கமனைத்தையும் போக்கி என்னைத் தேவரீரது திருவுளக் கருத்தின்படி ஆட்கொண்டருளுதல் வேண்டும்' என்று இப்பாடலில் முறையிடுகின்ருர்.

3. உளவறிந்து=ஆன்மா இறைவனை யடைவதற்கேதுவாயுள்ள உண்மைகளை இனிது விளக்கும் ஞான சாத்திரங்களை உள்ளபடி தெரிந்து.

அளவில்=முடிவில்லாத.
புன்மை=அற்பத்தன்மை.
களவு=திருட்டுத்தனம்.
கருத்து=மனம்.
தளரும் தன்மை=தளர்ச்சி யடையுந்தன்மை.

> "சலமிலனுய் ஞானத்தாற் றனையடைந்தார் தம்மைத்
> தானுக்கித் தலைவனவர் தாஞ்செய்வினை தன்னுல்
> நலமுடனே பிறர் செய்வினை யூட்டியொழிப் பானுய்
> நணுகாமல் வினையவரை நாடிக்காப்பான்"

என்னுஞ் சிவஞான சித்தியார் பாடல் இங்கறிதற்பாலதாம்.

---

சந்தாதாரர்களுக்கு.—சந்தா நெம்பர் தெரியாதவர்கள் மாத மாதம் வரும் சஞ்சிகையின் மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் சந்தா நெம்பரைப் பார்த்துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிறோம்.

## இயற்கைப் பெருமையும் செயற்கைப் பெருமையும்.

உலகின்கண் பெருமையடைய விரும்புவோர் பலரிருக்கின்றனர். அதுபற்றி நாம் சந்தோஷிக்கிறோம். அரிதாகிய மனிதவகுப்பிற் பிறந்தவரெவருமே பெருமையோடிருக்க விரும்பாராயின் அவரெடுத்த அவ்வருமைப் பிறவி வீண் பிறவியேயாம். ஆனால் பெருமையாவதியாது? அதை நாம் முன்னறிந்து கொள்ளவேண்டும்.

பெருமையாவது, செய்தற்கருமையானவற்றைச் செய்தல், அகங்கார மில்லாதிருத்தல், பிறர் குற்றங் கூறாதிருத்தல் முதலிய நல்ல குணங்களால் பெரியாராய் விளங்குவோருடைய தன்மையாம் என்று பொதுமறை கூறுகின்றது. இதன்படி, இக்குணங்களையுடையாரது மகிமையே பெருமையாம்; இஃதியற்கையில் அமைந்தது. இவ்வியற்கைப் பெருமையுடையாரே எல்லோரையும், எல்லாவற்றையும் அடக்கியாளுந் திறம்பெற்றவராவர். இந்த இயற்கைப் பெருமையில்லாதவர் ஒரு சிறு பிராணியிடத்திலுங் கூடத் தம் திறத்தைக்காட்டிப் பெருமை யடைதல் முடியாது. இத்தகையினர் தம்மைப் பிறர் பெருமைப்படுத்த விருமபுவது வெறுந் தற்புகழ்ச்சியாய் முடியும். இன்னவர், ஈ, எறும்பு, வண்டு முதலிய பூச்சிகளிடத்தும் இச்சென்னையம் பதியில் இப்போது அளவு கடந்து பெருகிப் பரவியுள்ள அற்பப் பிராணியான கொசுகைப் போன்ற அற்பப் பிராணிகளிடத்திலுங்கூட—தங்கள் வன்மையைக் காட்டமுடியாமல் அவமான மடைவர். அவர்களின் கதி, ஒரு பெருத்த சிங்கம் சிறிய கொசுகு ஒன்றின் வசப்பட்டுத் திக்கு முக்கலாடிய கதியாம். அந்தக் கதையாவது:—

ஒரு காட்டில் மிருகேந்திர னொன்றிருந்தது. அதற்கு அங்குள்ள எல்லா மிருகங்களும் மிகவும் பயந்து வாழ்ந்து வந்தன. ஒரு

நாள் அந்தச் சிங்கம் கம்பீரமான பார்வையுடன் நமக்கு மிஞ்சின பிராணியொன்றுமில்லை யென்றகங்கரித்து அக்காட்டில் ஓரிடத்தில் உட்கார்ந்திருந்தது. அப்போது ஒரு கொசுகு கொய் என்ற சப்தத்துடன் சிங்கத்தினிடம் வந்து அதன் முகத்தைச் சுற்றிப் பறந்து கொண்டிருந்தது. அதை யச்சிங்கம் கோபப் பார்வையோடு பார்த்துக்கொண் டிருந்தது. சிங்கம் பாராமுகமாயிருக்குஞ் சமயம் பார்த்துக் கொசுகானது, அதன் மூக்குத் துவாரம் ஒன்றனுள் நுழைந்து, ஓரிடுக்கிலமர்ந்து, ஊசிபோன்ற தனது மூக்கினுல் இரத்தம் பெருகச் சிங்கத்தின் மூக்கைக் குடைந்துகொண் டிருந்தது. சிங்கத்கத்திற்கு வேதனை அதிகமாயிற்று.

பாதை பொறுக்க முடியாத சிங்கம் "அடா! இந்த அற்பக் கொசுகு நமது கௌரவத்தையும் கம்பீரத்தோற்றத்தையும் கவனியாமல் எவ்வாறோ நம்முடைய நாசித்துவாரத்தில் புகுந்து நம்மைத் தொந்தரை செய்கின்றதே. இதை வெளியேற்ற நம்மாலாகவில்லையே. இவ்வளவுதானு நமது பராக்கிரமம். நாம் எல்லா மிருகங்களுக்கும் மேற்பட்டிருக்கின்றோமென்று நினைத்தது வீண் பெருமையாயிற்றே; இனி நாம் வீண் பெருமைக் காசைப்படுதலை விட்டுவிடவேண்டும்" என்று தனக்குள் சொல்லித் துக்கப்பட்டுக்கொண்டிருந்தது.

கடைசியில் கொசுகானது சிங்கத்தின் மூக்கினின்றும் வெளிப்பட்டு அதைச் சுற்றிச்சுற்றி ரீங்காரம் செய்துகொண்டு திரிந்தது. இது சிங்கத்திற்குப் பெருத்த அவமானமாயிருந்தது. அதனுல் அக்கொசுகை யொன்றும் செய்ய முடியவில்லை. பிறகு கொசுகு பறந்து போயிற்று. இன்னனம் இயற்கைப் பெருமையில்லாத சாதாரண மனிதர் சிகலம் கொசுகுக்கும் அடங்கி நடக்கக் கூடியவராவரென்பதை இப்போது சென்னையில் உண்டாகியிருக்கும் கொசுகின் தொந்தரவு நன்கு விளக்கும்.

கொசுகுகள் மிஞ்சிக் கொஞ்சமும் பயமின்றி வீடுகளின் அறைகளுக்குட் புகுந்து ஆங்காங்கு நித்திரை செய்பவரைக் கடித்துப் பொழுது விடியுமட்டும் தூங்க விடாமல் உபத்திரவப்படுத்துகின்றன. படுத்துக்கொண் டிருப்பவர் இவற்றை அகற்ற வியலாமல் துன்புறுகின்றனர். வெகுநேரம் வரை விசிறியால் விசிறிக் கைநோகிறதே என்று கையைக் கீழே வைத்தால் கொசுகுகள் உடனே அவர்களைத் தொந்தரை செய்யத் தொடங்கி விடுகின்றன. எவ்வளவுநேரந்தான்

விசிறிக்கொண்டிருக்க முடியும்? இந்த உபத்திரவத்தை நீக்கிக் கொள்ள வழி தெரியாமல் ஜனங்கள் விழிக்கின்றனர். இந்த அற்ப பிராணியாகிய கொசுகினிடத்தில் மனிதர் வல்லமை செல்லவில்லை. அதனிடத்தில் தற்பெருமை காட்டிக்கொள்ள முடியவில்லை. இந்தக் கொசுக்கடியால் தூக்கங் கெட்டுத் துன்ப முண்டாவதோடு மலேரியா காய்ச்சல், ஈரல் வீக்கம் முதலிய பலவியாதிகளுமுண்டாய் மனிதர்க்குக் கொடுந் தீமைகளை விளைவிக்கின்றன. இத்தகைய சங்கடங்களால் சிலர், "சாக்கடைகளைப் பூமிக்குள் புக விட்டதனுலேயே கொசுகுகள் தங்க இடமின்றி எங்களிடங்களிற் புகுந்து எம்மை வருத்துகின்றன; இதனை நகர சங்கத்தார் கவனித்து ஒரு நல்ல ஏற்பாடு செய்யவேண்டும்" என்று கதறுகின்றனர். பல பத்திரிகைகளும் இதைப்பற்றி முறையிடுகின்றன. என்ன முறையிட்டும், குறை கூறியும் கொசுகின் உபத்திரவம் நீங்கின பாடில்லை. அதனை அடித்துத் துரத்தவும் மனிதர்க்கு வன்மையில்லை. இதைப் பற்றி ஜனங்கள் கடவுளிடம் முறையிட வேண்டியவர்களாகவே யிருக்கிறார்கள். இத்தகைய துன்பங்களை நீக்கக் கடவுளுக்கே சக்தியுண்டு; சாதாரண மனிதர்க்கு அவ் வன்மையில்லை. ஆனால் இயற்கை மகிமையும் பெருமையுமுடைய தெய்வத்தன்மையுள்ள பெரியோர்க்கு உலக துன்பங்களை நீக்கும் சக்தியுண்டு.

ஆதலால், உலகச் சுழற்சியில் சிக்கிய மானிடர்களாகிய நாம் எவ்வகையிலும் தற்பெருமை கொள்ளலாகாது; "கடவுளே! எமக்கோராற்றலுமில்லை; சிறு கொசுகிடத்திலும் எங்கள் வன்மை செல்லாது; எல்லாவன்மையும் உனக்குண்டு, உன்னடியாராகிய இயற்கைப் பெருமையுள்ள பெரியார்க்குண்டு. எம்மை நீயே உலகதுன்பங்களினின்றும் நீக்கிப் பாதுகாத்தருளவேண்டும்" என்று பணிவு கூறி, கடவுளைப் பணிந்து அடங்கின முறையில் ஒழுகவேண்டும். நாம் இவ்வகைப் பணிவைக்கொண்டால் மட்டுமே நமக்கு இயற்கைப் பெருமையும் மகிமையுமுண்டாகும்; உலக துன்பம் நீங்கி இன்பமுண்டாகும்; இயற்கைப் பெருமைக்குரிய காரியங்களைச் செய்யாமல், வீண் பெருமையாகிய செயற்கைப் பெருமை—போலிப் பெருமை—தேட நினைப்பதால் புகழில்லை. எல்லோரும் நல்லொழுக்கங்களைக் கடைப்பிடித்து இயற்கைப் பெருமையடைய இறைவன் திருவருள் புரிவானாக.

ஓம் தத் ஸத்

## 11-வது ஆண்டு முடிவு.

ஆனந்தபோதினிச் சந்தா நேயர்களே! நமது பத்திரிகையின் பதினோராவது ஆண்டு நாளது ஆனி மாதத்தோடு முடிவுக்கு வருகிறது. இதுவரையில் இப்பத்திரிகை 40 பக்கங்களுடன் வெளிவந்திருப்பினும் பன்னிரண்டாவது ஆண்டின் தொடக்கமாகிய அடுத்த ஆடிமீ முதற்கொண்டு 8 பக்கங்கள் அதிகமாகச் சேர்க்கப்பெற்று 48 பக்கங்களோடு கூடியதாய் வெளிவரும். இன்னும் இதில் உயர்ந்த அமைப்புக்களையுடைய வியாசங்களும், சந்தர்ப்பம் வாய்ந்தபோது முக்கிய வியாசங்களின் கருத்தை விளக்கும் அழகிய படங்களும் வெளிவரும்.

நம் சந்தாநேயர்களனைவரும் இதுவரை நம் போதினியில் ஆதரவு வைத்து இதனை விருத்தி செய்து வந்ததுபோலவே எப்பொழுதும் இதன் மீது அபிமானமுடையவர்களாயிருந்து மேலும் மேலும் இதற்குப் பல சந்தாதாரர்களைச் சேர்த்து உதவிபுரிந்துவரின் இஃதின்னும் உயர்ந்த அமைப்புக்களுடன் வெளிவருதல் கூடும். ஆதலின், ஒவ்வொருவரும் இப்பத்திரிகையிற் செலுத்தும் அன்பை என்றும் மறவாதிருக்கும்படி இறைவன் அருள்புரிவானாக. பத்திராதிபர்.

---

## செய்ந்நன்றி மறவாமை.

ஒருவர் செய்த வுபகாரத்தை மறத்தல்கூடாது. விசுவாசங் குடிகொண்ட வுள்ளத்தவரால் அது போற்றத்தக்கது. செய்ந்நன்றி மறவாத நாய் முதலிய மிருகங்களுஞ் செய்ந்நன்றியற்ற மனிதர்களால் போற்றத்தக்கவையே. செய்ந்நன்றியுள்ள மனிதன் தேவனேயாவன். தளராவளர் தெங்கு தாளுண்ட நீரைத் தலையாற்றான் றருவது வியக்கத்தக்க தல்லவா? இத்தகைய குணமுள்ள நல்லோரொருவருக்குச் செய்யுமுபகாரமானது,கல்மேலெழுத்தாகும்; ஈரமிலா நெஞ்சத்தினராம் பாங்கறியாப் புல்லறிவாளர் தமக்கீந்த வுபகாரமானது கல்லின் மேலிட்ட கலத்தையும், நீர்மேலெழுத்தையுமொக்கும்.

நமக்கு நன்மை புரிவதிற் றாயார் முதலாவர். அவரது நன்றி பரிசுத்தமான அன்பேயாகும். மூந்தித் தவங்கிடந்து முந்நூறு நாளளவும் அங்கமெலாம் நொந்து சுமந்து குழந்தையைப் பெற்று "அப்பாடா!" என்றலறி ஸ்மரணையற்றுத் தான் மண்ணில் விழுந்து, பிறந்ததாண்குழவியாயின், அதைப் பிறர் சொல்லக் கேட்டதே கனைநீர்க் கடலிலோ ருவகை பூப்ப எழுந்து அதனைப் பரிந்தெடுத்துக் கைப்புறத்திலேந்தி, "உருசியுள்ள தேனே! அமுதமே! மாசறு பொன்னே! வலம்புரி முத்தே! காசறு விரையே! கரும்பே! ஆருயிர் மருந்தே! மலையிடைப்பிறவா மாணிக்கமே! அலையிடைப் பிறவா அமுதே! யாழிடைப் பிறவா இசையே!" என்று அன்புடன் அழைத்து அதற்குக் கலசப்பால் தந்து அதனைக் கட்டிலிலுந் தொட்டிலிலும் மார்மேலுந் தோண்மேலும் வட்டிலிலும் வைத்துக் காப்பாற்றி வருபவள்

தாயன்றோ? நாம் முன்னறி தெய்வம் அவளே யன்றோ? குழந்தையை யாளாக்குவது யார்? தாய்மார்கள்தாமே! இத்தகைய தாய்மார்களிடத்தில் நாம் விசுவாசமுடையவர்களா யிருக்கவேண்டாமா? அந்தோ! சிலர் தமது தாய்மார்களை வயிறெரியப் பாடுபடுத்துகிறார்கள்; இது தகுமா? "மாதா வயிறெரிய வாழாய் ஒருநாளும்" என்பது வேதவாக்கியமன்றோ?

இரண்டாவதாகத் தந்தையை எடுத்துக்கொள்வோம்: பிள்ளை பிறந்ததே அவனை யன்பாய்வளர்த்து அவனுக்கு வித்தியாப்பியாசம் செய்வித்து அவன் அறிவாளனாகும்படி செய்வது தந்தையார்தாமே! வார்த்திக திசையிலவருக் கன்ன பானாதிகளீந்து அவரைக் காப்பாற்றவேண்டியது பிள்ளைகளின் கடமையாயிருக்கத் தகப்பனைச் சிறைசெய்த அலங்கீர்(ஔரங்கஜேப்) போற் றந்தையைப் பாடுபடுத்துவது எத்தகைய மதியீனம்! காலஞ்சென்ற தந்தையாருக்குச் சிரார்த்தம் கூட நன்கு செய்யாது விடுகின்றனர் சிலர்; அன்னவரை நாம் என்னென்றுரைப்பது!

ஆதலால் நாம் பெற்றோர்களிடத்தில் அன்பாகவும் விசுவாசமாகவும் நடந்து அவர் மனம் மகிழும்படி வாழ்வதையே பெரியதோர் கடமையெனக் கொள்ளவேண்டும். அதுவே நாம் பெற்றோர்க்கியற்றும் கைம்மாறெனலாம். இன்சொற் புகலுதல், வழிபடுதல், உற்றவிடத் துதவுதல் முதலியவை பெற்றோரை மகிழ்விக்கச்செய்யுங் கருவிகளாகும்.

மூன்றாவதாகக் கடவுளை எடுத்துக்கொள்வோம்: கைம்மாறு கருதாது மழைபெய்யுங் கார்முகில்போ லான்மாக்களிடத் தேதுமெதிர்பாராது அவ்வான்மாக்களுக்குவேண்டிய அனைத்தையும் அமைத்தருளிய கருணாநிதியான கடவுளைப் போற்றாதது மதியீனமே; இறைவனைப் போற்றாதாரீண்டு நராவரோ? இத்தகைய அறப்பெருங் கடலாகிய அண்ணலுக் கியற்றுங் கைம்மாறு அவரிட்ட விதியை யியற்றி யிடாதவற்றை விலக்கி வாழ்வதேயாம். அவர் "பொய் சொல்லாதே; சோரம் செய்யாதே; பரிசுத்தமான இதயத்தினனாயிரு" என்றருளியபடி நாம் நடக்கவேண்டியவர்களே. அவ்வாறின்றி அவர் விலக்கியவற்றைச் செய்து இறுமாப்படைவோமாகில் அந்தோ! நம்கதி தலைகீழாகும். நாம் இருளடர்ந்த நரகத்தில் உழலுவோம். சகோதரரே! அது பயங்கரமானதே. தினந்தோறு மக்கருணைக்கடலை மனமுருகிப் பத்து நிமிட நேரமாயினுந் துதிக்கவேண்டிய தின்றியமையாததே. நாம் கற்பதெதற்காக? எண்குணமுடைய இறைவனை யடைதற் பொருட்டேயன்றோ? அந்தோ! சிலர், "கடவுளேது கிடவுளேது? எல்லாங் கட்டுக்கதை. எட்டுச் சுரைக்காய்" என்று நாத்தழும்பேற இடைவிடாது பேசித் திரிவர்; அவர்தம் மதிதானென்னே! அம்மம்ம! பரிதபிக்கத் தக்கதே!

இங்ஙனம் பெற்றோர்களிடத்துந் தெய்வத்தினிடத்தும் விசுவாசத்துடன் நாம் நடந்துவந்தோமே ஆகில் எல்லாம்வல்ல இறைவனிரங்கி நம்மை அழியா ஆனந்தத்திலாழ்த்தி நமக்கு இன்னருள் புரிவன். ஆதலின்,

எனதன்பார்ந்த சகோதரர்களே! ஓ! இந்தியத் தாயின் புத்திரர்களே! பெற்றோர்களிடத்தும் தெய்வத்தினிடத்தும் செய்நன்றி பாராட்டுங்கள். மாதா பிதாக்களே கண்ணிற்குத் தெரியுங் கடவுட் பிரதிநிதிகள். எந்த மனிதனால் அவனது தாய்தந்தையர் திருப்தியடைந்து வருகிறார்களோ அப்படிப்பட்ட மனிதனிடம் கடவுள் திருப்தியடைகிறார். ஆதலால் பெற்றோர்களிடம் ஒருபொழுதும் கொடிய சொற்களை யுபயோகித்து அவர்களை வருத்தாதிருங்கள்; பெற்றோர்களுக்குமுன் வேடிக்கையாகப் பேசக்கூடாது; சோம்பலைக் காட்டக்கூடாது; கோபத்தைக் காட்டவேண்டாம். மாதா பிதாக்களுக்கு முன் மகன் பணிவுடன் வணங்கி அவர்களுக் கெதிரில் ஒழுக்கமாய் எழுந்து நிற்றல்வேண்டும். அவர்களுட்கார உத்தரவளிக்கும் வரை யங்ஙனம் நிற்கவேண்டும். தன் சரீரத்திற்குக் காரணமான பெற்றோர்களை மகிழ்விப்பதில் ஆயிரந் துன்பங்களைச் சகிக்கச் சித்தமா யிருத்தல் வேண்டும். இந்த விதமாய்ப் பெற்றோர்களை மகிழ்விப்பதே நாமவர்கட் கியற்றும் பெருங் கைம்மாறு.

"ஓ! மனிதனே! உன்னைப் படைத்தவர் ஒருவர் உளர்; அவர் சர்வ சத்தியும் வாய்ந்தவர்; நீ தினந்தோறும் இயற்றும் பற்பல குற்றங்களையும் பொறுப்பவர். நீ இப்பேர்ப்பட்டவரை யறிந்து வணங்காதது மூடத்தனம். அந்தோ! இத்தகைய கருணாநிதியைப் புறக்கணியாதே; அங்ஙனமாயின் உன் பாபங்கள் மன்னிக்கப்படா; உன் முடிவு பயங்கரமானது; உன்னுடைய குறைகளைக் கூறி அவைகளைத் தீர்க்கும்பொருட்டும் உன்னுடைய பெருத்த பாபங்கள் மன்னிக்கப்படுவதன்பொருட்டும் அவரை மனங்கரையத் துதித்துப் பிரார்த்தனை செய்; உன் விண்ணப்பங்களை யவர் ஏற்றுக்கொள்வார்; அவற்றின்படி செய்வார்; இப்படி உனக்கு நன்றி புரியுமவருக்கு நீ கைம்மாறாகத் தரவேண்டியது பரிசுத்தமான அன்பே; அதையே அவர் உன்னிடம் கோருகிறார்; அந்தோ! அத்தகைய அன்பை நீ அவரிடம் செலுத்தாது நாமரூபத்துடன் தோன்று மனித்திய திரிசிய போகங்களிடத்தில் செலுத்தி, பாபத்தைத் தேடிக்கொள்கின்றாய்; இது தகுதியன்று; இனியாவது தெளி" என்று பெரியோர் கூறியிருக்கின்றனர். ஆதலின், அன்பார்ந்த நேயர்காள்! செய்ந்நன்றி விசுவாசமுடையவர்களாகி, நன்றிசெய்யும் பெற்றோர்களிடத்தும் தெய்வத்தினிடத்தும் அன்புடையோர்களாகி, அவர்களை மறவாமல் வாழுங்கள்.

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக.

அ. ப. சுப்பிரமணியன், கோபிசெட்டி பாளையம்.

---

## உலகவாழ்வின் அநித்தியம்

இப்பூவுலகவாழ்வு நிலையற்றதென்பது அனைவரும் அறிந்த விஷயம். அப்படியிருந்தும் அநேகருடைய ஜீவியத்தின் இலக்கை நாம் உற்று நோக்குமிடத்தில் அவர்கள் இந்த உலகத்தில் எக்காலமும் நிலைத்திருக்கும் பாக்கி

யத்தைப் பெற்றவர்கள்போல எண்ணி நடப்பதைக் காண்கிறோம். அஞ்ஞான அந்தகாரத்தில் அவர்கள் அமிழ்ந்திருப்பதே இதற்கு முக்கிய காரணமாகும். ஒவ்வொரு மனுஷனுக்கும் அவனுடைய சுற்றத்தவர்களுக்குள் அல்லது சிநேகிதர்களுக்குள் ஓர் மரணம் நிகழும்பொழுது ஒருவகையான சுடலைஞானம் உதிப்பது சகசம். இந்த ஞானம் நீர்க்குமிழிபோன்ற நிலையற்ற ஓர் மனக்கிளர்ச்சியேயன்றி வேறல்ல. மன உறுதியோடுகூடிய உண்மை ஞானத்தையடைந்த மகான்களுக்கு இவ்வுலகமும் அதிலுள்ள சகல போகபோக்கியங்களும் ஒரு கனவுபோலத் தோன்றுமென்பது நிச்சயம். எண்ணரிய பிறவிகளுள் அதிக விசேடம் பொருந்தியதாகிய மானிடப் பிறவியை எடுத்த நாம் இவ்வுலகத்தையும் இதிலுள்ள பல அனுபவங்களையும் மாத்திரம் நிலையுள்ளனவாக மதித்து நடப்பது எவ்வளவு மதியீனம்!

> "நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
> பெருமை யுடைத்திவ் வுலகு."

என்பதனால், நேற்று நல்ல சுகபெலமுள்ளவனாயிருந்த ஒருவன் இன்றைக்கு இவ்வுலகவாழ்வைத் துறந்து பரலோகப்பிராப்தி யாயினனென்று சொல்லக்கூடிய பெருமை வாய்ந்ததாக இவ்வுலக மிருக்கிறதென்று தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் திருவாய் மலர்ந்தருளியிருப்பதை நாம் உற்று நோக்குந்தோறும் நம்மையறியாமலே இவ்வுலக போகங்களில் ஓர்வித வெறுப்புத் தோன்றுமென்பதற்குச் சந்தேகமில்லை.

உலகத்தையும் அதிலுள்ள சகல சராசரங்களையும் பூரண ஞானமும் இரக்கமுமுள்ள எம்பெருமான் நம்முடைய ஈடேற்றத்தின் பொருட்டே நிலைபெறச் செய்திருக்கின்றாரென்பது மறுக்கொணா உண்மை. ஆதலால் உலகிலுள்ள ஒன்றையாவது நாம் வெறுத்துத்தள்ளுவது ஒருபோதும் சரியல்ல. ஆனால் உலக தோற்றங்களில் பாசம்வைத்து ஏமாந்து போகாமலிருக்கவேண்டியதே நம்முடைய பெரும் கடமை யென்பதை நாம் மறவாதிருத்தல் வேண்டும். இழந்துபோன மனுஷரை அல்லது பொருட்களைக் குறித்துச் சிலகாலங்களில் தாங்கமுடியாத மனவேதனையுற்று வருந்துவது நம் ஒவ்வொருவருடைய அனுபவமல்லவா? இவ்வனுபவம் முற்றத் துறந்து முழுதுமுணர்ந்த ஞானிகளுக்கேயன்றி மற்றவர்களுக்கு இல்லாமலிருப்பது அரிதிலுமரிதாகும். எக்காலமும் உலகம் போற்றித் துதிக்கும் துறவிகளுக்குள் தலைமைபெற்று விளங்கி உலகத்தவர் உய்யும் வழியைக் காட்டிய பட்டினத்தடிகள்,

> "ஊருஞ்சதமல்ல உற்றார் சதமல்ல உற்றுப்பெற்ற
> பேருஞ் சதமல்ல பெண்டீர் சதமல்ல பிள்ளைகளும்
> சீருஞ் சதமல்ல செல்வம் சதமல்ல தேசத்திலே
> யாரும் சதமல்ல நின்றாள் சதங்கச்சி யேகம்பனே" என்றும்

> "விட்டுவிடப் போகுதுயிர் விட்டவுட னேயுடலைச்
> சுட்டுவிடப் போகிறார் சுற்றத்தார்—பட்டதுபட்

டெர்ரோ முஞ்சிவனை யேத்துங்கள் போற்றுங்கள்
சொன்னே னதுவே சுகம்.''

என்றும் பாடியிருப்பதை நாம் ஆறுதலாய்ச் சிந்திப்போமாயின் நமக்கும் உலகத்திற்கும் எவ்வகையான தொடர்பு இருத்தல் உசிதமென்பதை உணர்ந்து உய்தற்கு ஏதுவாகும். பரம ஞானிகள் ஒவ்வொருவரும் உலகத்தையும் அதன் நிகழ்ச்சிகளையும் ஒருவகையான பற்றுமின்றிச் சாட்சி மாத்திரையாகவே பார்த்து ஆனந்தித்திருப்பார்களென்று அவர்களுடைய அனுபவங்களிலிருந்து நாம் எளிதில் விளக்கிக்கொள்ளலாம். முத்திப்பெரும் பேற்றைப் பெறுபவனடையத்தகும் பேரின்பத்தோடு உலக இன்பமாகிய சிற்றின்பத்தை ஒப்பிடும்போது உலக இன்பத்தின் வெறுமையை விளக்கிக் காட்டுவதற்காகப் பின்வரும் உதாரணத்தை அறிவாளிகள் சாதாரணமாய்க் கூறுவதை நாம் கேட்டிருக்கிறோம். அதாவது, ''ஒருமனுஷனை ஒரு யானை கோபத்தோடு துரத்தித் தீங்குசெய்ய எண்ணும் தருணத்தில் அவன் சிறிதுதூரம் ஓடிப் பிறகு ஓடச்சக்தியற்று வழியிற்றோன்றிய ஒரு செடிக்கிணற்றுள் விழும்பொழுது அக்கிணற்றின் அடியில் ஓர் ஐந்துதலை நாகம் சீறிக்கொண் டிருப்பதைக்கண்டு பயந்து அக்கிணற்றின் நடுவில் உட்பக்கத்தில் வளர்ந்திருந்த ஓர் அறுகம் புல்லைக் கையினாற்பற்ற, அப்புல்லைக் கிணற்றுக்கட்டிலிருந்த ஓர்எலி பற்களினால் கடித்துக்கொண் டிருப்பதைக் கண்ணுற்று விசனத்துடன் மேலே பார்க்க, கிணற்றின்மேல் வளர்ந்திருந்த ஒரு மரக்கொம்பிலிருந்து ஒரு துளிதேன் கீழிறங்குவதைப் பார்த்து வாயைத்திறந்து அத்தேனைக்குடித்து ஒரு சிறிதுநேரம் மகிழ்ச்சியடைந்தான்'' என்பதேயாம். இவ்வளவு துன்பங்களுக்கிடையில் அவனுக்கு அந்த இன்பம் கிடைத்ததென்பதைக் கவனித்து ஊன்றி யோசித்தால் உலக இன்பங்களெல்லாம் இத்தன்மையனவே யென்பது நன்குபுலப்படும்.

உலகவாழ்வு அநித்தியம் என்னும் பெரிய உண்மையை நாம் உணருந்தோறும் சுயநலங்கருதிப் பிறருக்குத் தீமை விளைக்கும் எண்ணம் நம்முடைய மனதை விட்டகலும். நான் செல்வன், நான் சாதிக்காரன், நான் கல்விமான், நான் அதிகாரி என்றற்றொடக் கத்தனவாகிய வீண் எண்ணங்களும் வீம்புவார்த்தைகளும் நமக்குள் இல்லாதொழிவதற்கு ஏதுவாயிருக்கும். உலக அமைப்பின் ஓர் அற்புதத்தை நம்மில் அநேகர் கவனிக்கிறதில்லை. கவனித்தாலும் அதனாலடையத்தகும் பயனை முற்றாய்ப்பெறுவதில்லை. அதென்னவென்றால், இருபத்துநாலு மணித்தியாலங்கொண்ட ஒவ்வொரு நாளிலும் சாக்கிராவஸ்தை சொப்பனாவஸ்தை இரண்டிலும் கழியும் காலம்போக சுழுத்தி அவஸ்தையாகிய ஆழ்ந்த நித்திரையில் நாம் ஒவ்வொருவரும் ஐந்து மணித்தியாலமாவது கழிக்கின்றோமல்லவா? இந்த ஐந்து மணித்தியாலமும் உலகிலுள்ள எல்லா மனிதருடைய அனுபவமும் ஒரே தன்மையாயிருப்பதை நாம் அறிந்தும் அறியாதவர்கள்போ லிருக்கின்றோம். இராசாவும் குடியானவனும், செல்வனும் ஏழையும், அதிகாரியும் அதிகாரமற்றவனும், தீண்டும் சாதியான் தீண்டாச்சாதியானாகிய

அனைவரும் ஆழ்ந்த நித்திரையிலிருக்கும்பொழுது ஒரு பேதமுமில்லாதவர்களாக விருந்து நித்திரைவிட்டெழுந்து கண்விழித்தவுடன் ஒருவருக்கொருவர் எத்தனையோ பேதங்களைச் சிருஷ்டித்துக்கொண்டு எவ்வளவு கஷ்டப்படுகின்றனர். இந்த மகா ஞானத்தை நம்மவர் உணர்ந்தால் உலகத்தில் மனுஷருக்குள் எவ்வளவு அன்பும் அனுதாபமும் சந்தோஷமும் மன ஆறுதலுமிருக்கும். அப்போது ஒவ்வொருவரும் தத்தமக்குரிய கடமைகளைப்பற்றி மிகவும் சாக்கிரதையாயிருப்பார்கள்.

எல்லாரும் ஞானிகளாயிருந்தால் உலகம் நடைபெறாது. இவ்வுலகத்திலுள்ள சகல பொருட்களும் எல்லாருக்கும் பொதுவானவைகளா யிருந்தால் ஒருவரும் பிரயாசப்பட்டு அப்பொருள்களைப் பாதுகாக்க ஏவப்படார்கள். இதற்காகத்தான் கடவுளுடைய அளவிறந்த ஞானத்தினால் இவ்வுலகம் எப்பொழுதும் நடைபெறத் தக்கவகையாய் அமைக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு மனுஷனும் தன்னுடைய பெண்சாதி, பிள்ளை, மாடு, ஆடு, காணி, பூமி என்னுமிவற்றைநினைத்து அபிமானிப்பதாகிய அஞ்ஞானத்தில் ஈடுபட்டிருக்கிறபடியினாலேதான் உலகத்தில் மிகவும் சிறிய ஒரு பகுதியையாவது, எல்லாம் தனக்கு அன்னியமென்பதை முற்றாய்மறந்து பாதுகாக்கிறான். எல்லாம் எல்லாருக்கும் பொதுவாகச் சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றன வென்னும் உண்மை ஞானம் உதித்தவுடன் அனேக காரியங்களை மனுஷன் கைவிட்டுவிடுவான். ஏதாவதொன்றை ஒருவன் தன்னுடைய சொந்தமென்று நினைக்கும்பொழுது அது அவனுடைய சித்தமில்லாமல் அவனைவிட்டுப் பிரியாமலல்லவோ இருத்தல் வேண்டும். அதுவுமன்றி, தான் வைத்திருக்கவிரும்பும் ஒவ்வொன்றையும் தன்னாற்றலாய் அவன் பெறத்தக்கதாயு மிருத்தல் வேண்டும். அப்படி இல்லாதிருக்கும் பொழுது விழலுக்கிறைத்த நீர்மாதிரி மனுஷன் நிலையற்ற கானற்சலம் போன்ற அனுபவங்களில் ஏமார்ந்து வருந்துவது எவ்வளவு புத்தியீனம்.

நாம் இவ்வுலகத்தில் பிறந்தபொழுது இதிலுள்ள ஒன்றாவது நம்முடைய சொந்தமென்று சொல்லத்தக்கதாக இருக்கவில்லை. இங்கே சில காலம் ஜீவித்திருந்து பின் இறக்கும்பொழுது பிரயாசப்பட்டுத் தேடிச் சேமித்து வைத்திருக்கும் ஒன்றையாவது கொண்டுபோகத் தக்கவல்லமையும் நமக்கில்லை. கண்மணிகளிலும் அருமையாக நேசித்த மனைவிமக்கள் உற்றாருறவினர் சினேகிதராதியோரில் ஒருவரையாவது பிரியாதிருக்கும் சிலாக்கியம் நமக்கு ஒருபோதும் கிடையாது. தாங்கமுடியாத நோயுற்றுப் பாய்ப்படுக்கையாயிருக்கும் பொழுது நம்முடைய வருத்தத்தில் ஒரு பகுதியை ஏற்று நமது துன்பத்தை நீக்கி ஆறுதலை தரக்கூடியவர்கள் இவ்வுலகில் ஒருவருமில்லை யென்பது நாம் பூரணமாய் அனுபவத்திற் கண்டறிந்த விஷயம். இம்மட்டோ! ஆரைப்பார்த்தாலும் தங்கள் தங்கள் காரியங்களில் கண்ணுங்கருத்துமா யிருக்கிறார்களே தவிர மற்றவர்களுடைய நன்மையை அவாவி அவர்களுக்காக கஷ்டப்பட்டு உதவி செய்கிறவர்களைக்

காணுவது மிகவும் அபூர்வமாயிருக்கிறது. அப்படிச் சிலர் இருந்தாலும் அவர்கள் தங்களுக்கு ஏதாவது நன்மை செய்யக்கூடியவர்களென்று அறிந்தால் மாத்திரம் அவர்களுடைய கஷ்டகாலங்களில் அவர்களைக் கவனித்து உதவிசெய்வார்களேயன்றி, பிரதிபலன் கருதாமல் மற்றவர்களுக்காகக் கஷ்டப்படுபவர்கள் இவ்வுலகில் மிகச் சிலரினுஞ் சிலரென்று சொல்லுதல் தவறாகாது. இப்படியெல்லாமிருக்கிறபடியால்தான் பற்றின்றி நாம் மற்றவர்களுக்குக்காட்டும் அன்பிற்கும் அனுதாபத்திற்கும் இக்காலத்தில் நன்றியீனமே பெரும்பாலும் பிரதிபலனாக ஏற்படுகின்றது.

இப்படியெல்லாமிருக்கும் பொழுது, நித்தியவஸ்துவாய் ஆன்மகோடிகளுக்கெல்லாம் பூரண அன்பும் இரக்கமும் சொரிந்துகொண்டிருக்கும் ஈஸ்வரனை இடைவிடாது தியானித்து ஈடேறுவதைவிட்டு, நமது வாணாளை வீணாக்குவது எவ்வளவு பரிதாபமான காரியம். நம்முடையதென்று நாம் சொல்லும் ஒவ்வொன்றையும் நாம் பிறக்குமுன் சிலர் தங்களுடையதென்று சொன்னது மாத்திரமன்றி நாம் இறந்தவுடன் வேறு சிலர் தங்களுடையதென்று சொல்லப்போகிறார்கள். இந்த இலட்சணங்களெல்லாம் பொருந்திய நீர்க்குமிழியையொத்த இவ்வுலகவாழ்வு அநித்தியமென்ற பேருண்மையை நாம் கனவிலும் மறவாதிருத்தல் அத்தியாவசியம். மறக்குந்தோறும் பல தொல்லைகளைத் தொடர்ச்சியாய் அனுபவிக்கவேண்டி வருமென்பது நிச்சயம். உலகவாழ்வு அநித்தியமாயிருப்பதனால் அதனை உடனே விட்டுவிட வேண்டுமென்பது கருத்தல்ல. தாமரையிலையில் தங்கியிருக்கும் தண்ணீர்போலப் பற்றின்றி உலகத்திலிருந்து கடவுளில் மாத்திரம் நம்பிக்கையும் அன்பும் வைத்து இடையறாத் தியானத்தோடிருப்பதே அறிவாளிகள் கடனாகும்.

"இந்திரசாலம் உலக வைபோகம்
இன்றைக் கிருப்பது வோசந்தேகம்
அந்தர மின்னல்போல் அழியும் தேகம்
ஆதலாலுனக்கேன் அதனுடன் சினேகம்"

என்று ஸ்ரீமான் வேதநாயகம்பிள்ளை யவர்கள் "சர்வசமய சமரசக்கீர்த்தனை"யில் பாடியிருப்பதை நாமனைவரும் சிந்தித்துத் தெளிந்து ஈடேறுவதற்கு எல்லாம்வல்ல இறைவனை இடைவிடாத் தியானத்திலிருந்துவோமாக.

கா. சின்னப்பா, அளவெட்டி, யாழ்ப்பாணம்

---

## நாலடியார் வசனம்.

(441-ம் பக்கத் தொடர்ச்சி.)

### 37-ம் அதிகாரம்-பன்னெறி (பல் × நெறி) (பலவழிகளைச் சொல்லுதல்)

(யாவரும்) விரும்பத்தக்க நற்குண நற்செயல்களையுடைய மனைவியைப் பெற்றிராதவனுடைய வீடானது, மேகங்கள் தவழும்படியான மாளிகையாய் சிறப்புமிகுந்த காவலையுடையதாய் ஆபரணங்கள் விளக்குப்போல நிலைபெற்று விளங்கினும் என்ன பிரயோஜனம்! (1)

(பெண்கள்) குற்றம் சிறிதுமில்லாத வாள் வீரரின் காவலிலிருந்து (கற்பொழுக்கத்தினின்று) தவறுதலை தாங்கள் அடையாராஞலும், அச்சிறு குற்றத்தை யாராயினும் செய்யாமல் தம்மைப் பாதுகாத்துக் கொண்டகாலம் சிறிதே. (ஆனுல்) இனிமையாகப் பேசும் சொற்களையுடைய அப்பெண்கள் நல்லொழுக்கத்தைக் கைக்கொள்ளாத காலமோ பெரிதாம். (2)

(கணவன் கோபித்து அடிக்கச்செல்லுகையில்) 'அடி' என்று எதிர்த்து நிற்கும் மனைவியானவள் எமனுக்குச் சமமானவள்; உதயகாலத்தில் (உண்டி சமைத்தற்காக) சமையலறைக்குள் செல்லாதவள் (சகிப்பதற்கு) அருமையான வியாதிக்கொப்பானவள்; சமைத்ததைக் (கணவனுக்குச்) சாப்பிடுங்களென்று கொடாதவள் வீட்டில் வாழும் பேயாவள்; இம்மூவரும் தம்மைக் கொண்ட கணவனைக்கொல்லும் ஆயுதங்களுக் கொப்பாவார்கள். (3)

(இல்வாழ்க்கையை) 'நீக்கிவிடு' என்று (பெரியோர் சொல்லக்) கேட்டும் நீக்காதவனும், தலை வெடித்துப் போகும்படி (பிணப்பறையானது 'டொண், டொண்' என்று) சப்திப்பதைக் கேட்டும் இல்வாழ்க்கையின் தன்மையைத் தெரிந்துகொள்ளாதவனும் மறுபடியும் ஒரு மனைவியை மணந்துகொண்டு இன்பமா யிருக்கின்ற மயக்கபுத்தி யுள்ளவனை (ப் பார்த்துப் பெரியோர் இவன்) கல்லைக் கொண்டடிக்கும் வெறியனென்று கூறுவர். (4)

தவத்தில் முயற்சி செய்து வாழ்தலே ஒருவருக்கு உத்தம (மார்க்க) மாகும்; நற்குண நற்செய்கைகளையுடைய மனைவிமக்களிடம் (இல்லறத்தில்) தங்கி வாழ்தல் மத்திமமே; பொருள்கிடைக்கா தென்றெண்ணியும் செல்வத்தினிடத்து வைத்த ஆசையால் தமது குடிப்பிறப்பு கல்வி முதலிய மேன்மைகளை அறியாதவர்களின் பின்னேபோய் நிற்கின்ற நிலையானது அதமமாம். (5)

உத்தமர்கள் பல நூல்களைக்கற்றுக் காலங்கழிப்பார்கள்; மத்திமர் நல்ல போகங்களை அனுபவித்துக்கொண்டு கழிப்பார்கள்; அதமர் 'யாம் இன்பமாக உண்டிலோம், செல்வம் நிரம்பப் பெற்றிலோம்' என்று நினைக்கும் வெறுப்பால் தூக்கமுமில்லாமல் (துக்கித்துக்) கழிப்பார்கள். (6)

செந்நெல்லானது வயல் முழுதும் காய்க்கும் வளமுள்ள கழனிசூழ்ந்த மருதநிலத்தையுடைய பாண்டியனே! செந்நெல்லிலிருந் துண்டான செழித்த மூளையினுல் மறுபடியும் அந்தச் செந்நெல்லே தோன்றி விளையும். ஆதலால் பிதாவினறிவே பிள்ளையினறிவாம். (தந்தை நல்லறிவுடையவனுகவிருந்தால் பிள்ளையும் நல்லறிவுடையவனுயிருப்பான் என்றபடி.) (7)

இவ்வுலக வியல்பானது, (தொன்று தொட்டு தொடர்ச்சியாக வருதலை) உடைய பெரிய செல்வரும் (கல்வி கேள்விகளால் நிறைந்த) பெரியோரும் அழிந்து, (இழிகுணமுள்ள) வைப்பாட்டிகளின் பிள்ளைகளும் கீழ்மக்களும் பெருகி, கால்மாட்டிலிருக்கவேண்டியது தலைமாட்டிலிருப்பதாகிய குடைக்காம்புபோல, கீழானது மேலானதாய்நிற்கும். (8)

இரத்தினங்களை வாரிக்கொண்டு விழுகின்ற ஆற்றையும் பெருமை பொருந்திய மலைகளையுமுடையநல்ல பாண்டியநாட்டானே! நற்குணமுள்ள சிநேகர்கள் (தம்மிடம்வந்து) தங்களுடைய மனத்திலுள்ள துன்பங்களைச் சொல்லியபின்பும்; அத்துன்பங்களை நீக்காத மனமுடையவர்கள் உயிர் வாழ்ந்திருப்பதைவிட மலையின் மேலேறிக் கீழே விழுந்து உயிர்விடுதல் (மிகவும்) நல்லது. (9)

நிதானமாக ஆராய்ந்து பார்த்தால் புதிய (வெள்ள) நீரும் அழகிய காதணியையுடைய வேசைகளின் சிநேகமும் (ஆகிய) இவ்விரண்டும் வேறுபாடில்லாதனவாம். (எங்ஙன மெனில்) புது நீரும் மழை நின்ற மாத்திரத்தில் நீங்கிப்போகும்: அப்பெண்களினன்பும் பொருள் வருவாய் நின்றால் நின்றுவிடும். (10)

## 38-ம் அதிகாரம்—பொதுமகளிர்.

(பொருள் தருவோர்க்கெல்லாம் பொதுவாகவுள்ள வேசையர் தன்மை) விளக்கின் ஒளியும் வேசிகளின் சிநேகமும் இரண்டும் திடமாக ஆராயுமிடத்து வித்தியாச மில்லாதவைகளாம். (எவ்வாறெனில்) எண்ணெய் வற்றியபொழுதே விளக்கொளியும் அற்றுப்போகும். வேசிகளன்பும் கைப்பொருளற்றபொழுதே அற்றுப்போகும். (முன் அதிகாரத்துக் கடைசி செய்யுளையும் இதனோடு ஒப்பிடுக.) (1)

ஆராய்ந்தணிந்த ஆபரணங்களையுடைய பொதுமகளானவள் நாம் (மலையிலேறி விழுந்தால் தாமும்) நம்முடன் செங்குத்தான மலையினுச்சியிலிருந்து குதிப்போமென்று சொன்னவள் (இப்போது நம்மிடம் பொருளில்லாமையால்) தனது காலில் வாத நோய் வந்திருக்கிறதென்று பொய்க் காரணங்காட்டி (பொய்யாகவே) அழுது மலைச் சிகரத்திலேறி விழுவதற்கு எம்முடன் வராமல் நீங்கினாள். (2)

கொய்யும் தளிர்போன்றவராகிய பொதுமகளிர், அழகிய இடமகன்ற தேவலோகத்திலுள்ள தேவர்களால் வணங்கப்படும் மகாவிஷ்ணுவே யானாலும் ஆகட்டும், தமது கையில்கொடுக்கும் பொருள் சிறிது மில்லாதவர்களைத் தமது கையால் கும்பிட்டு விட்டு விடுவார்கள். (3)

அன்பில்லாத மனமும் நீலோற்பல மலர்போன்ற கண்களுமுள்ள வேசையர்க்குப் பொருளில்லாதோர் விஷம் போன்றவராவர்; யாவரும் காணும்படிசெக்காடும் தொழிலையுடைய சாமானியராயினும் பொருள் தேடிவைத்திருப்போர் அவ்வேசையர்க்குச் சர்க்கரைக் கொப்பாவர். (4)

மிருகத்தையொத்த அறிவற்ற மூடர், பாம்பிற்கு ஒரு தலையைக் காட்டி மற்றொருதலையை இனிமைபொருந்திய தெளிந்த நீருள்ள தடாகத்திலுள்ள மீனுக்குக்காட்டுகின்ற விலாங்கு மீனைப்போன்ற செய்கையையுடைய வேசையரின் தோள்களைச் சேர்வர். (5)

(எனது) நல்ல மனமே! நூலிற்கோக்கப்பட்ட உள்ளே துளையையுடைய இரத்தினத்தையும் இணைபிரியாத அன்றில் பறவையையும்போல,

எப்பொழுதும் நம்மைவிட்டுப் பிரியமாட்டோமென்று சொன்னபொன்வளை யலை யணிந்த பொதுமகளும், போர்செய்யும் தன்மையுள்ள ஆட்டுக் கடாவின் கொம்புபோல முறுக்குள்ள (மாறுபாடான) குணமுடையவளாயினள். (ஆதலால்) நீ அவளிடத்தில் நிற்பாயோ! என்னுடன் வருவாயோ! (6)

(முதலில்) காட்டுப் பசுவைப்போல இன்பமுண்டாகும்படி நக்கி, அவர் கையிலிருக்கும் பொருளை வாங்கிக்கொண்டு, (பின்பு) இடக்குச் செய்யும் எருதைப்போல குப்புறப் படுத்துக்கொள்ளும் வேசையினிடத்திலுள்ள அன்பை மெய்யென்று (நம்பி) ஏமாந்து, (அவன்) எம்முடைய பொருளென்றிருப்போர், பலராலும் பழிக்கப்படுவோர்கள். (காட்டுப்பசு உடம்பை நக்கினால் அச்சமயம் சுகமாயிருந்து பின்பு மரணத்தை புண்டாக்கும்) (7)

செம்மையான முத்திநெறியில் சேர்வோமென்று கருதுவோர், (ஒருவர் மோகவலையிலகப்பட்டுக்கொண்டு) மயங்கிய பொழுது அவர்க்கு இன்பமுள்ளவர்கள் போலிருந்து, (பிறகு வறுமையடைந்து) தாமே இச்சித்துச் சென்றகாலத்தில் அன்பில்லாதவர்களாய் ஆட்டுக்கடாவின் கொம்புபோல், மாறுபடும் (குணத்தையுடைய) மான்போன்ற பார்வையுடைய தமக்குரிய மோசவழியில் நடக்கின்ற வேசையர்களிடத்தில் சேரமாட்டார்கள் (8)

ஒளிபொருந்திய நெற்றியையுடைய வேசையர், (பிறர்க்குத்) துன்பத்தை புண்டாக்கும்படியான (தங்கள்) மனதைப் பிறரறியாதபடி தமக்குள்ளே மறைத்து வைத்துக்கொண்டு (பிறர்) நம்பும்படி பேசின வார்த்தைகளைக்கேட்டு (உண்மையென்றே) நம்பி, (இவ்வேசையர் எம்மிடம் அன்புடையாரென்று எண்ணுகிறவர்களும்) எண்ணிக் கொள்ளட்டும். (அவ்வாறு நினைப்போர்) மற்ற யாவர்க்கும் உரியவராகார். தமக்கே யுரிய வுடம்பை யுடையவராவர். (9)

பாவம் மிகுந்த உடம்பையுடையவர்கள், பிரகாசம் பொருந்திய நெற்றியையுடைய வேசையர், தமது மனம் (வேறு) ஒருவரிடத்திலிருக்கவும் (தம்மிடமேயிருப்பதாக) வஞ்சனையால் செய்யும் நினைவெல்லாம் தெளிவாக ஆராய்ந்தறிந்த விடத்தும் (அவ்வஞ்சனையை) அறியாதவராவர். (10)

(தொடரும்) பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.

---

## ஆரிய சித்தாந்தம்.

(445-ம் பக்கத் தொடர்ச்சி.)

### குரு.

தகப்பனும் மூத்த தமையனும் உபதேசம் செய்தாலும் செய்யாவிட்டாலும் குருமரியாதைக் குரியவர்களேயாவர். இவர்கள் அவ்வதிகாரத்துடன் பிறந்தவர்களாதலால் இவர்களைப் படித்தவர்கள் படியாதவர்களென்று கவனியாமலே மரியாதை செய்யவேண்டும். இதுபற்றியே வேத

மும் "மாதாவே தெய்வம் பிதாவே தெய்வம்" என்று கூறி அவர்களுடைய மகிமைகளை விளக்கியது. பிதாவைவிட மாதா அதிக சிலாக்கியமானவள். அதனாலேதான் நூல்களெல்லாம் பெற்றோர்களை யெடுத்துப் பேசும்போது தாயை முன்கூறிப் பிதாவைப் பின்வைத்துக் கூறுகின்றன. "மாதாபிதா குருதெய்வம்" இது முறை கூறியது. "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்பனவாதி நீதி வாக்கியங்களும் தாயை முன்னிட்டே கூறின ஆதலால் மாதா சர்வ சிரேஷ்டமானவள்.

அதற்குக்காரணம் யாதோவெனில் கூறுதும்: ஆத்மாக்களுக்குள் தூல சூட்சும காரணமென மூவகைச் சரீரங்களுண்டு. கரசரணாதி அவயவங்களுடன் கட்புலனுக்கு விஷயமாகும் சரீரமே ஸ்தூலசரீரம். அது எல்லாராலும் காணக்கூடியது. சூட்சுமசரீரம் மலத்திலழுந்திக்கிடக்கும் உணர்ச்சியற்ற சரீரமாம், அது ஈசுரகிருபையால் தன்மாத்திரை ஐந்து, வாசனை இரண்டு, மனம் ஒன்று ஆக எட்டுக்கருவிகளுடன் கூடிய சரீரம். இதுவே ஸ்தூலசரீரத்துக்குக் காரணமாகும். இந்தச் சூட்சும சரீரந்தான் கனவில் காணப்படுவது. இது புரியஷ்டகசரீரம் என்றும் கூறப்படும். இதுவே பிரதமசிருஷ்டியில் ஜீவான்மாக்களிடத்தில் கருணை கூர்ந்த மஹேசுவரன் கர்மமல சம்பந்தமான மாயாமலத்துடன் கலந்து செய்யப்பட்ட சரீரம். பிரமஞான நிஷ்டர்கள் ஸ்தூலசூட்சும காரணமென்கிற முச்சரீரங்களையும் தகித்து விடுவார்கள். ஆதலால் அவர்கள் அர்ச்சிராதிமார்க்கமென்னும் சூரியமார்க்கமாகப் பிரமபதத்தை யடைந்துவிடுவார்கள். அவர்களை விட்டு மற்றவர்களையே நாம் கவனிக்கவேண்டியது.

ஏனைய ஜீவர்கள் உத்தமர், மத்திமர், அதமர் என்று மூவகைப் படுவார்கள். நித்திய கர்மானுஷ்டானங்களைத் தவறாமல் செய்துகொண்டும், தேவபிதிர்க் கர்மங்களைச் சிரத்தையுடன் செய்துகொண்டும், அதிதிகளை ஆராதித்துக்கொண்டும், இயன்ற அளவு பரோபகாரம் செய்துகொண்டும், பொய், களவு, வஞ்சனையாதிகளை விட்டும் இருப்பவர் உத்தமர் என்னப் படுவார். பிறர்க்குத் தீங்கு தேடாமலும், சன்மார்க்கத்தினால் ஜீவித்துக்கொண்டும் வைதிகநெறி ஒழுகுவோர் மத்திமராவர். பாபத்தொழில்களை வெறுப்பின்றிச் செய்துகொண்டு துர்நெறி ஒழுகுவோர் அதமர் எனப் படுவார். இவர்கள் முறையே சொர்க்காதிபுவனங்களையும் அதில் தாழ்ந்த போக பூமிகளையும், அதமர் நரகலோகத்தையும் அடைவார்கள். இவர்கள் வியாதி முதலியகாரணங்களால் ஸ்தூல சரீரத்தைவிட்டுச் செல்வார்கள். இவர்களை எமதூதர்கள் பற்றிக்கொண்டு போவார்கள். உத்தமர்கள் சொர்க்கத்திலிருப்பார்கள். மத்திமர் ஆசையொழியாதவர்களாதலால் திரிலோகங்களிலும் தத்தம்கர்மத்துக்குத் தக்கபடி ஜனித்துச் சுழல்வார்கள். அதமர்கள் நரகத்திலிருந்து விடுபட்டபின் திரியக் ஜந்துக்களாக ஜனிப்பார்கள்.

இந்த மூவகை மனிதரும் ஸ்தூல சரீரத்தை விட்டபின் பரலோகம் போகும் மார்க்கம் மூன்று, அவை இரமணீயம், நிராபாதம், தூர்த்தர்சம்

என்று முறையே பெயர்கொண்டவைகள். இரமணீயம் உத்தமர் செல்லும் வழி. நிராபாதம் மத்திமர் செல்லும் பாதை. தூர்த்தர்சம் பாபிகளாகிய அதமர் போகும் மார்க்கம். உத்தமர்கள் மரணம் அடையும்போது எமதூதர்கள் திவ்யாலங்காரத்துடன் மகிழ்ச்சியாய் வந்து அவர்களை யெடுத்துக்கொண்டு இரமணீயம் என்னும் மார்க்கமாகப் போவார்கள். அந்தப் பாதை இருபுறத்திலும் மலர்தரும் விருட்சங்கள் நிழல் செய்துகொண்டும் வாசனை வீசிக்கொண்டுமிருக்கும். பாதையில் பரிமளநீர் தெளிக்கப்பட்டிருக்கும். சுத்தமான குளிர்ந்த காற்று வீசிக்கொண்டிருக்கும். மனதுக்கு மகிழ்ச்சிதரும். மத்திமர்களை நிராபாதமார்க்கமாகக் கொண்டுபோவார்கள். அந்த மார்க்கம் ஒளியுள்ளதாயும் நடக்கச் சிரமமில்லாததாகவு மிருக்கும். அதமர்கள் செல்லும் தூர்த்தர்சம் என்னும் வழி துர்க்கந்தம் வீசிக்கொண்டும், காடு முரடாகவும் நடக்கமுடியாததாகவு மிருக்கும். எமதூதர்கள் அதமர்களுக்கு வெளிப்படும்போது சண்டாள ரூபமாகவும் பார்க்கப் பயங்கரமாகவும் தோன்றுவார்கள். மத்திமர்களுக்குப் போர்வீரர் கோலத்துடன் தோன்றி அவர்களை நிராபாத மார்க்கமாகக் கொண்டுபோவார்கள். இம்மூவர்களுக்கும் கர்மவசியம், போகவசியம், யாதனுவசியம் என்று மூவகைச் சரீரங்களுண்டு. உத்தமர்களைப் போகவசிய சரீரத்தில் சேர்த்துக்கொண்டு போவார்கள். மத்திமர்களைக் கர்மவசிய சரீரத்திற்பொருத்திக்கொண்டு போவார்கள் அதமர்களை யாதனைவசிய சரீரத்தில் சேர்த்து எமலோகத்துக்குக் கொண்டுபோவார்கள். இவர்களை இம்சித்துக் கொண்டு போவார்கள்

எமலோகத்தில் சிறந்த சபையில், எமதர்மராஜா தர்மாசனத்தில் வீற்றிருந்தருள்வர். மந்திரி முதலானவர்களும் சூழ்ந்திருப்பார்கள். தூதர்கள் தாங்கள் பிடித்துக்கொண்டு வந்தவர்களை அவருக்குக்காட்டுவார்கள். தர்மராஜா உத்தமர்களை மரியாதையுடன் உபசரித்து வரவேற்று அவர்கள் செய்த நற்கர்மங்கள் அவர்களுக்குச் சித்திக்கத்தக்க உலகங்களை அடையும்படி கட்டளையிடுவார். அவர்கள் சொர்க்காதிபதவிகளை அடைவார்கள். கர்மவசிய சரீரமுடையவர்களை உபசரித்து மீண்டும் மானிடசரீரத்தையே அடையும்படி செய்வார். யாதனுசரீரம் பெற்ற அதமர்களைத் தாம் பார்க்கவே மாட்டார். அவர்களுக்கு நரகத்தையடையக் கட்டளையிடுவார். எமதூதர்கள் அவர்களைப் பலவகையான நரகத்தில் வீழ்த்தி வருத்துவார்கள். இந்த யாதனுசரீரம் எமலோகத்திலேதான் உண்டு. வேறெங்கும் இல்லவே இல்லை. பாவிகளே யாதனுசரீரத்துடன் நரகதுன்பத்தை அனுபவித்து அவ்விடங்களில் வசிப்பார்கள். பாவம் ஒழிகிறவரையில் நரகாவஸ்தை ஒழிவதில்லை. இந்தநரகலோகங்கள் ரௌரவம், மஹாரௌரவம், கண்டகாவனம் அக்கினிகுண்டம், அமாநுஷம் என ஐந்துவகையாகப் பகுக்கப்பட்டுள்ளன. இவற்றுள் அநேகம் பிரிவுகளுண்டு. அமானுஷம் என்பது பஞ்சஷட்கம் என்றும் சொல்லப்படும். மிகக் கொடியபாவங்களை வெகுகாலம் செய்தவர்கள் இந்த நரகலோகத்தில் பஞ்சபூதங்களாலும் வருந்துவதனால் இதற்

குப் பஞ்சஷட்கம் என்று பெயர் வந்தது. இவற்றை விரிப்பதினால் பய னில்லை. மேலே செல்வோம்.

இந்த நரகங்கள் ஜீவர்களுக்குப் பாவ நிவாரணமாகக் கருதப்படுகின் றன. பாவமொழிந்தபின் மீண்டும் கர்ம உலகத்தில் சரீரமெடுப்பார்கள். பாவிகள் பாவசேஷத்தினால் பசு பட்சியாதி ஜந்துக்களாகவும், மனிதர் களில் தாழ்ந்தகுலத்தில் தரித்திரர்களாகவும் ஜனித்துக் கஷ்டப்படுவார் கள். உத்தமர்கள் புண்ணிய விசேஷத்தால் உத்தம குலத்தில் கல்விகளிற் சிறந்தவர்களாகவும் செல்வவான்களாகவும் ஜனிப்பார்கள். நரகத்தினின் றும் விடுபட்டவர்கள் பிதிர்லோகம் என்னப்படும் சந்திரமண்டலத்தை அடைவார்கள். சந்திரமண்டலம் உவர்மண் அண்டமென்று கருதப்படு கிறது. அவ்விடத்தில் அடைந்த சூட்சுமசரீரங்கள் பரிபாகத்தை அடை யும். சிலகாலமானபின் அவை பனித்துளிகளின் வழியாகக் கீழிறங்கும். இறங்கி மரங்கள் செடிகள் கொடிகளிற் பிரவேசிக்கும். அவ்வாறு பிர வேசித்தவை கர்மங்களுக்கேற்றபடி மிருகபட்சிகளுக்கும் மனிதர்களுக்கும் உணவாகும். அவ்வுணவினால் ஆண்சரீரத்தில் சென்றவை இரண்டு மாதம் பரிபாகப்பட்டுச் சுக்கிலரூபமாகப் பெண்ணினது கர்ப்பாசயத்திற் பதிந்து அவளுடைய சோணிதத்தினால் கரசரணாதி அவயங்களையும் ஞானேந்திரிய கருமேந்திரியங்களையும் உருக்கொண்டு பூமியில் ஜனிக்கும். இந்தக்காரணத் தினாலேயே பிதாவைவிடமாதா சிரேஷ்டமானவளென்று நூல்கள்கூறுகின் றன. இதுகாறுங்கூறியது முன் நித்தியவிதி கூறுமிடத்தில் பிதிர் கிருத் தியமாகிய சிராத்தகிரியை கூறும் பிரகரணத்தில் விரித்துக் கூறப்பட்டுள் ளது. ஆதலால் விரிக்கவில்லை. இது கூறுக்கால் மாதா எவ்வாறு குருவா வாள் என்பது விளங்காது. அதற்காகவே இங்கே சிறிது கூறினோம்.

இனி பிதா கல்வியைப் போதிக்கிறான். ஞானசாஸ்திரங்களை உப தேசிக்கிறான். தெய்வபக்தியை விளக்குகிறான். அவனைக் குரு வென்பது பொருந்தும். அன்னத்தை ஊட்டிவளர்க்கும் மாதா குருவாவதெப்படி என் னும் சந்தேகம் உண்டாகக்கூடும். அதுபற்றிச் சிறிது கூறுவோம். தகப் பனிடத்திலிருந்து ஜீவனே வெளிப்பட்டது. முதுகெலும்பு தகப்பன் சுக் கிலத்தினாலேதான் உண்டாயிற்று என்று நூல்கள் கூறுகின்றன. இலௌ கிக வைதிகங்களை அறியவும் அவற்றைச் செய்யவும் கூடிய ஞானேந்திரியங் களும் கர்மேந்திரியங்களும் தாயால் பெற்றவைகளே. இக்கருவிகள் இல் லாவிடில் ஜீவாத்மாக்கள் மரமட்டை கற்களைப்போலவே பயனற்றுக் கிடக் கும். சகல விஷயங்களையும் அறியக்கூடிய ஞான கருவிகளையும் தொழில் களைச் செய்யக்கூடிய கர்மேந்திரியங்களையும் தந்த தாயானவள் தகப்பனை விட எத்தனையோமடங்கு சிறந்தவள்.

(தொடரும்) சிவானந்த சாகர யோகீஸ்வரர்.

## ஆத்திசூடி உதாரணக் கதைகள்.

(440-ம் பக்கத்தொடர்ச்சி)

### "அரவ மாட்டேல்"

"அரவம்—(விஷமுள்ள) சர்ப்பத்தை, ஆட்டேல்—(மனிதனே! நீ பிடித்து) ஆட்டி விளையாடாதே" என்பது இதன் பொருள்.

சிறு பிள்ளைகள், விளையாட்டுப் பருவத்தில், 'சிறுபிள்ளை பயமறியாது' என்னும் பழமொழிக்கிணங்கப் பயமின்றிச் சில சாதாரண ஜந்துக்களைப் பிடித்தாட்டி விளையாடிவருவார்கள். அந்தப் பழக்கம் சில பிள்ளைகளிடத்தில், அவர்கள் பெரியவர்களான பின்னரும் நீங்குவதில்லை. அதனால், அவர்கள் சாதாரணபிராணிகளைப்பிடித்தாட்டிய தைரியத்தைக்கொண்டு துஷ்ட ஜந்துக்களையும் பிடித்தாட்டத் தொடங்கிச் சில மந்திரதந்திரங்களால் அத்தீச்செய்கையை நடத்திப் பலரிடத்தும் காட்டித் தற்பெருமைபாராட்டி வருவார்கள். இதனால் ஒரு சமயத்தில் அவர்களுக்கு அபாயம் நேர்ந்துவிடும். அப்படி அபாய முண்டாக்குவதில் அரவம் முதன்மை பெற்றதாகும். ஆதலின், அதனை முதன்மையாகக் குறிப்பிட்டு அதன் மூலம் விடஜந்துக்களைப் பிடித்தாட்டுதல் கூடாதென்பதைச் சிறுவர்க்கு விளையாட்டுப் பருவத்திலேயே உணர்த்தி அவர்கள் அத்தீச் செய்கையை விட்டுவிடும்படி செய்யக்கருதி ஒளவைப் பிராட்டியார் இந்நீதியைக்கூறினர். இங்ஙனம் கூறியும், பெரியோர் உரையை அவமதித்துத் தங்கள் புத்தியின்போக்கே நேரானதென்று அகங்கரித்துத் தீநெறியில் செல்லும் சிந்தையினர் சிலர் இவ்வுயர்ந்த நீதியை உள்ளத்தில் கொள்வதில்லை. செய்யத்தகாதவற்றைச்செய்து தீமைக்குள்ளாவர். அங்ஙனம் கெட்டார் பலருண்டு. அவர்களுள் ஒருவன் சரிதையை இதனடியில் விளக்குவாம்:—

ஒரு கிராமத்தில் ஒருசிறுவன் சிறு ஜந்துக்களைப் பிடித்தாட்டித் தினந்தோறும் விளையாடி வந்தான். அவனுடைய செய்கையை மனிதர்கள் அதிசயத்தோடு பார்த்து வந்தார்கள். அவன் அவ்வாறு ஜனங்கள் தன்னுடைய செய்கையில் வியப்புறுவதை புணர்ந்து உற்சாகங்கொண்டு நீர்ப்பாம்புகளையும், விஷமில்லாத வேறு சில பாம்புகளையும் பிடித்து விளையாடத் தொடங்கினன். அப்போது பல ஜனங்கள் அவனைப்பார்த்து, "ஆ! இவன் பயமின்றிப் பாம்பைப்பிடித்து விளையாடுகின்றானே!" என்று முன்னினும் அதிக ஆச்சரியமடைந்து வந்தார்கள். மனிதர்கள் அவனை வியந்து கூறும் வார்த்தைகள் அதிகப்பட அதிகப்பட அவனுக்கு உற்சாகமும் அதிகரித்துக்கொண்டே வந்தது. அதனால் அவன், "நாம் இன்னும் ஏதேனும் தந்திரம்செய்து கொடியவிஷமுள்ள அரவம் முதலியவற்றைப் பிடித்து ஆட்டினால், ஜனங்கள் நம்மை அதிகமாகக் கொண்டாடுவார்கள்" என்று நினைத்து, ஒரு பாம்பாட்டியிடம் பணம்கொடுத்துப் பாம்பின் விஷத்தை நீக்கத்தக்கதும், பாம்பை வசப்படுத்தக் கூடியதுமாகிய கிரியாகங்கை யென்னும் ஒரு பச்சிலையின் வேரைவாங்கி ஒரு செப்பில் அடைத்துவைத்

துக்கொண்டு அதன் உதவியால் சர்ப்பங்களைப் பிடித்து விளையாடத் தொடங்கிவிட்டான். அந்தவேரை, சர்ப்பத்தின் முகத்துக்கு நேரே காட்டினால் அது உடனே சோர்ந்து தலையைக் கீழே வைத்துப் படுத்துவிடும்; பின்னர் அதனை எடுத்து என்னசெய்தாலும் பேசாமலிருக்கும். இவ்வேரின் உதவியைக் கொண்டுதான் பாம்பாட்டிகள் சர்ப்பத்தைப் பிடித்து அதன் விஷப்பற்களைப் பிடுங்கிவிட்டு ஆட்டித் தங்கள் தொழிலை நடத்துவது வழக்கம். இவ்வாறே அவ்வாலிபன் அந்த வேரைக் கையிலெடுத்து வைத்துக்கொண்டு சர்ப்பங்களை மயக்கிப்பிடித்துக் கழுத்தில் சுற்றிக்கொள்வதும், தோளிற்போட்டுக்கொள்வதும், இடுப்பில் கட்டிக்கொள்வதுமாக, மனிதர்க்கு விளையாட்டுக்காட்டி வந்தான். ஜனங்கள் மேலும் மேலும் அவனை மகா மந்திரக்காரனென்று கொண்டாடிவந்தார்கள். ஒரு பெரியவர் மாத்திரம் அச்செய்கையில் வெறுப்புற்று ஒரு நாள் அவனிடத்தில், "இச்செய்கை ஒருசமயத்தில் உனக்குத் தீங்கை புண்டாக்கிவிடும்; ஆதலால் இதனை நீ விட்டுவிடு" என்று சொன்னார். அவன் அதைக் கேட்கவில்லை.

அதன்மேல் அவன் ஒருநாள் ஒரு செடியினடியில் கிடந்த ஒரு நாகத்தைக் கண்டான்; அதுவோ மிகுந்த பசியினால் அவஸ்தைப்பட்டுக் கிடந்தது. அதைக்கண்டவுடன் அவன் அந்த வேரை யெடுத்துக் கையில்வைத்துக்கொண்டு விரைந்துபோய் அதன் முகத்திற்காட்டி அதைப்பிடிக்கக் கரத்தை நீட்டினான். அந்தோ! பரிதாபம்! சர்ப்பம் அந்த வேரைச்சட்டை பண்ணாமல் ஆங்காரங்கொண்டு சீறி வேகமாய்ப்பாய்ந்து அவன் கையில் இரண்டு மூன்று முறைகள் கடித்துவிட்டது; விஷம் அக்கினிபோல் அவன் உடம்பில் ஏறிற்று. அவன் மிகவும் திகிற்பட்டுக் கையில் வைத்திருந்த வேரைப் பாம்பு கடித்த விடங்களில் வைத்துத் தேய்த்தான்; வாயிலிட்டு மென்று தின்றான். ஏறினவிஷம் இறங்கவில்லை. அவனுடைய தலைக்கேறி விட்டது. சிறிதுநேரத்திற்குள் அவன் பிரேதமாகிவிட்டான்.

இவனிடமிருந்த வேர், விஷத்தை நீக்கக்கூடிய தென்பதை இவனோடு பழக்கமாயிருந்த வேற்றூர்மனிதன் உணர்ந்து ஒருநாள் இவனிடம் வந்து அதைக்கேட்டான். இவன் அதைக் கொடுக்கமாட்டேனென்று சொல்லிவிட்டான். அதனால் வேற்றூர்மனிதன் 'இதை எப்படியாவது கைப்பற்ற வேண்டும்' என்று இவன் தூங்கும் சமயம் பார்த்துச் செப்பிலிருந்த அந்த வேரை யெடுத்துக்கொண்டு, அதைச் சும்மாவைத்தால் இவன் தன்மீது சந்தேகப்படுவானென்று அந்த வேர்போன்ற வேறொரு வேரை அதில் வைத்துவிட்டுப் போய்விட்டான். இவன் அந்த உபயோகமற்ற வேரைத் தன்னுடைய விஷசஞ்சீவியென்று நினைத்து எடுத்துக்கொண்டு பாம்பைப் பிடிக்கப் போனபடியால் அது அடங்காமல் இவனுடைய உயிரைப் போக்கிவிட்டது. இதனால், துஷ்டஜந்துக்களைப் பிடித்து விளையாடுவோர்க்கு எச்சமயத்திலேனும் நிச்சயமாக ஆபத்துண்டாகுமென்பது விளங்கும்.

(தொடரும்) செம்பூர். வீ. ஆறுமுகஞ் சேர்வை.

## கலியுக அக்ஷய பாத்திரங்கள்.

சென்ற துவாபர யுகத்தின் பிற்பகுதியில் பாண்டவர்கள் வனவாசஞ் செய்தகாலத்தில், தருமபூபதி, சூரியனிடத்தில் ஓர் அக்ஷயபாத்திரம் பெற்ருர். அது, எடுக்க எடுக்கக் குறையாமல் அன்ன மளித்துக்கொண்டிருந்தது. அதனுதவியால் அவர், தம்முடனிருந்த சாதுஜனங்களுக்கும், மற்றையர்க்கும் விருப்பந் தீருமட்டும் அன்னமளித்துத் திருப்திசெய்து வந்தார். இவரைப்போல இக்காலத்தில் உலகத்திலுள்ள ஜனங்களைத் திருப்தி செய்வதற்குப் பால்விற்பனைசெய்வோரும், மோர், தயிர் விற்போரும், பனஞ்சாறு (பதினி) விற்போரும் வருணபகவானைவேண்டி அக்ஷயபாத்திரங்கள் பெற்றிருக்கிருர்கள். வருணன், "நான் தண்ணீர்க்குழாயிலும், ஏரியிலும், கிணற்றிலும், குளத்திலும் ஜலவடிவமா யிருப்பேன்; நீங்கள் வேண்டியபோதெல்லாம் உங்கள் பாத்திரங்களில் புகுந்து, உங்கள் பாலும் மோரும் தயிரும் பனஞ்சாறும், உருவமும் நிறமும் மாருதிருக்கச் செய்வதோடு அவை எப்பொழுதும் பாத்திரங்களில் குறையாதிருக்கவும் செய்வேன்" என்று அவர்களுக்கு வரங் கொடுத்திருக்கிருர். அதனுல், அவர்களுடைய பாத்திரங்களிலுள்ளவைகள் எவ்வளவு விற்ருலும் குறைவதில்லை. எப்பொழுதும் அவை நிறைந்தே யிருக்கின்றன. இந்தப் பாத்திரங்களின் மூலம் வருணபகவான் இவர்களுக்கு மிகுந்த வருமானந் தேடிக்கொடுத்துச் சௌக்கியத்தைபு முண்டாக்குகிருர். சாப்பாட்டுக் கடைக்காரர்களும், எடுக்க எடுக்கக் குறையாத இரச அக்ஷய பாத்திரமொன்று பெற்றிருக்கிருர்கள். இதிலும் வருணபகவான் ஜலரூபமாய்ப் புகுந்து இரசத்தை நிரப்பிவருகிருர்.

இவர்களன்றி நெய், எண்ணெய், கள், சாராயம், மண்ணெண்ணெய் முதலியவை விற்போரும் தங்கள் தங்களுக்கு வேண்டிய இடங்களில் அக்ஷய பாத்திரம் பெற்றிருக்கிருர்கள். எனினும் அவை எப்பொழுதும் நிரம்பியவைகளாயிருப்பதற்குச் சில இடையூறுகளிருக்கின்றன; அவற்ருல் அவர்கள் மனவருத்தப்படுகிருர்கள். நெய்க்காரர்கள், எள், குசும்பா, வேர்க்கடலை, சில மிருகங்கள் பிராணிகள் முதலியவற்றின் சத்துக்கள் தங்கள் நெய்ப்பாத்திரத்தில் நிறையும்படி அவற்றினிடம் வரம்பெற்றிருக்கிருர்கள்; ஆனுல் அவைகள் வந்து புகும்போது நெய்யின் மணமும் உருசியும் குறைந்து வேறு மணமும் சுவையும் கிளம்பிவிடுகின்றன; அவற்ருல் அவர்களின் அக்ஷயபாத்திர இரகசியம் வெளிப்பட்டு விடுகின்றது. எண்ணெய்க்காரர்கள், குறைந்த விலையுள்ள வேர்க்கடலை முதலியவற்றின் சத்து தங்கள் எண்ணெய்ப் பாத்திரத்தில் வந்து நிறைந்துகொண்டிருக்கும்படி வேர்க்கடலையினிடம் அனுக்கிரகம் பெற்றிருக்கிருர்கள்; ஆனுல், வேர்க்கடலை யெண்ணெய் புகும்போது நல்லெண்ணெயின் மணம் மாறி அந்த அக்ஷய பாத்திரத்தின் மர்மத்தை வெளிப்படுத்திவிடுகிறது. கள், சாராயம் விற்போர் தங்கள் பாத்திரம் ஜலத்தால் நிறையும்படி ஜலதேவனுகிய வருணனிடத்திலேயே வரம்பெற்றிருக்கின்றுர்களெனினும், ஜலம் புகுந்

தாலும் கள், சாராயத்தில் பேதந்தெரியாதெனினும் ஆப்காரி யொன்றின் அச்சமிருப்பதால் அவர்கள் பாத்திரம் நிறைய இடையூறுண்டா யிருக்கிறது. மண்ணெண்ணெய்க்காரர்கள் தங்கள் பாத்திரங்களில் ஜலமே நிறையும்படி வருணனிடத்தில் வரம்பெற்றிருக்கிறார்களெனினும், ஜலம் சேரும் போது அந்த எண்ணெயோடு கலக்காமல் பேதத்தைக்காட்டி அக்ஷய பாத்திரத்தின் இரகசியத்தை வெளிப்படுத்திவிடுகிறது. இக்காரணங்களால், இவர்கள் அக்ஷயபாத்திரங்கள் பெற்றும் பூரணதிருப்தியடையாமல், சமயம் நேர்ந்தபோது தங்கள் பாத்திரங்கள் கொஞ்சம் கொஞ்சம் நிரம்ப, சிறிது மகிழ்ச்சியும், பால்காரர் முதலியவர்களின் பாத்திரங்களைப் போல் நம்முடைய பாத்திரங்கள் உதவவில்லையேயென்ற பொறாமையும், வருத்தமும், முணுமுணுப்பு முடையவர்களா யிருந்துவருகிறார்கள்.

இந்த இருவகை அக்ஷயபாத்திரக்காரர்களுடைய நிலைமை இப்படியிருக்க, இவர்களிடம் பால் மோர் முதலியவற்றை வாங்கி உபயோகிப்பவர், அவற்றிற்குப் பதிலாக ஜலத்தையே உட்கொண்டு ஜலம் வயிற்றைக் குளிரச் செய்வதாயிருந்தும் அதனால் வயிற்றெரிச்சல் கொண்டு இந்த அக்ஷயபாத்திரங்கள் அடியோடு ஒழியவேண்டுமென்று கடவுளைப் பிரார்த்திக்கிறார்கள். எண்ணெய், நெய் முதலியவற்றிற்குப் பதிலாக வேறு தாழ்ந்த சத்துக்களை வாங்கி உபயோகிப்போரும் நெஞ்செரிந்து நோய் கொண்டு அவ்வகை அரைகுறை அக்ஷயபாத்திரங்களும் அடியோடு அழியவேண்டுமென்று ஆண்டவனைத் துதிக்கின்றார்கள். ஜனங்களுக்கு வயிற்றெரிச்சலைக் கிளப்பிவிடும் இந்தக் கலிகால அக்ஷயபாத்திரங்களை ஒழித்துச் சௌக்கியத்தை உண்டாக்குதற்கு, அதிகாரவர்க்கத்தினரும், ஆங்காங்குள்ள நகரசங்கத்தார்களும் சிறிது கண்ணோட்டம் செலுத்தினால் உலகத்திற்கு மிக்க நன்மை யுண்டாகும். நல்லுரை நவில்வோன்.

---

## இலங்கையில் இந்தியக்கூலிகள்.

அன்பிலும் அறிவிலும் சிறந்த தமிழ்நாட்டுச் செல்வர்களே!

நாம் முன்னேற்றமடைய வேண்டுமென்னும் பேரவாவுடன் இருக்கும் இக்காலத்தில் நம் நாடானது நாகரீகத்திலும், கல்வி அறிவு ஒழுக்கங்களிலும் சிறந்துவிளங்காமல் தாழ்மை அடைந்திருக்கின்றது. இலங்கையில் இருக்கிற இந்தியக்கூலிகளே இதற்குப் போதிய சான்றாவர். கூலிகளின் நிலைமை எவ்வளவு பரிதபிக்கத்தக்கது? இங்கே இருக்கும் கூலிகட்குத் தங்கள் பாஷையில், தங்கள் மதத்தில், தங்கள் நாட்டில் அபிமானமும் ஆசையுமுண்டா? மக்களாய்ப் பிறந்ததின் பயன்யாது என அறியாது உண்பதிலும், உடுப்பதிலும், சண்டை போடுவதிலுமே தங்கள் வாழ்நாளை வீணே கழிக்கிறார்களென்பதனை நினைக்க மனம் வாடுகின்றது. ஏறக்குறைய 1500 தோட்டங்கள் இலங்கையில் இருக்கின்றன. ஒவ்வொரு தோட்டத்திலும் ஏறக்குறைய 75 அல்லது 100 இந்தியக்கூலி ஆட்கள்

இருப்பார்கள்; மொத்தமாக 15000 கூலிகள் அனியாயமாய்த் தங்கள் வாழ்நாட்களின் பயனை அறியாது வாழ்வார்களானால், கல்வி அறிவிலும், ஜீவகாருண்ணியத்திலும் சிறந்த மகான்கள் இவ்வுலகத்தில் இருப்பதில் பயன்யாது? கல்வி அறிவிற் சிறந்த தமிழ்நாட்டுச் செல்வர்களே! இனியாயினும் இப்பெருங்குறையை அறிந்து நிவிர்த்தி செய்வீர்களாக.

இலங்கையில் சில தோட்டங்களில் பள்ளிக்கூடங்கள் இருக்கின்றன. எனினும் அங்குள்ளவர்கள் உண்மையாகவே பிள்ளைகளைப் படிப்பிக்கிறார்களா? கொஞ்சநேரம், வேலை செய்த பிள்ளைகளைப் படிப்பிக்கிற மாதிரி காட்டிக் கொள்கிறார்கள். செல்வர்களின் பிள்ளைகளைப்போல் இவர்களுக்குக் கல்வி பயிற்றுவிக்கவல்லவா வேண்டும். கொஞ்சம் வயது வரையிலாயினும் இவர்களைப் படிப்பிக்கவேண்டுமல்லவா? அஞ்ஞானத்திலே கிடந்து அழுந்தும்படி இக்குழந்தைகளை அவர்கள் விட்டு விடுகிறார்களே. வயதில் முதிர்ந்த இவர்கள் அஞ்ஞான முன்னவர்களாய் இருந்தாலும், இனிமேல் மனுஷர்களாய் வரப்போகின்ற குழந்தைகளுக்காவது கல்விபயிற்றுவித்தல் வேண்டாவா?

கடவுளைப்பற்றியும், வாழ்க்கையின் பயனைப்பற்றியும் அறியாதவர்கள் அனேகர் நேரங்களைச் சண்டை பிடிப்பதிலும் குடிப்பதிலுமே வீணாகச் செலவழிக்கிறார்கள். ஓர் அற்ப நேரத்தையாவது கடவுள் தியானத்தில் செலவிடுகிறார்களில்லை. குடிப்பதற்கும் வியபிசாரம்செய்வதற்கும் பின்னிடமாட்டார்கள். இப்படி இவர்கள் செய்வது இவர்களின் அறியாமையே.

இக்கூலிகள் அறிவாகிய உயிர் இல்லா உடம்புபோல் சீவிக்கின்றார்கள். மிருக வாழ்க்கையையே அனுசரித்து வருகின்றார்கள்.

"விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்"

என்று தெய்வப்புலமை வாய்ந்த திருவள்ளுவனாரும் சொல்லிப் போந்தனர். ஆகையினால் அக்கூலிகளின் அஞ்ஞான இருளை நீக்க, கல்வி அறிவே அத்தியாவசியமானது. மானிடர் ஆசை, கோபம், லோபம், பொறாமை முதலியவற்றைத் தவிர்த்துச் சகல பிராணிகளிடத்தும் அன்பும் அனுதாபமும் நிறைந்தவர்களாய்ப் பஞ்ச புலன்களாம் மதயானைகளை அறிவென்னும் அங்குசங்கொண்டடக்கித் தான தருமங்களையே தங்கள் முக்கிய கடமையாகக்கொண்டு, குருலிங்க சங்கம பக்திகளிற் சிறந்து, கல்வி கேள்விகளில் விருப்புடையோராய், சித்தத்தை இறைவன் பால் வைத்து, இல்வாழ்க்கையென்னும் வண்டியை நெறிதவறாது செலுத்திப் பிறவிப் பெருங்கடலைத் தாண்டி அது அடையுமிடமாகிய நித்தியானந்தப் பெரும்பேற்றை யடைதற்கு ஏதுவாய் உதவி புரிவது கல்வியல்லவா? அதுவே

"அறம்பொருள் இன்பம் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையும் நாட்டும்—உறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்கும் கல்வியி னூங்கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை"

ஆகையினால் இக்கூலிகள் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு புருஷார்த்தங்களையும் அடைதற்கு ஏதுவானது கல்வி என்பதற்கு ஐயமில்லை. ஆகையினால் இவர்களுக்குக் கல்வி போதிக்கவேண்டும். தோட்டங்களில் இருக்கும் வயோதிகர் கல்வி அறிவு இல்லாதவர்களாயிருந்தாலுமிருக்கட்டும்; இனி விருத்திக்கு வரத்தக்க குழந்தைகள் அப்படியிருப்பது கூடாது. அவர்கட்குக் கல்வி பயிற்றுவித்து நல்வழியைக் காட்டிவைக்க வேண்டும். அவர்களுக்காவது பிறவியின் பயனை எடுத்துக்காட்டவேண்டும். இம்முறைகளைத் தோட்ட முதலாளிமார் அனுசரித்து வரக்கூடியவர்களாயிருந்தும் கவனிப்பதில்லை; அவர்கள், பிள்ளைகள் தங்களுக்கு வேலை செவ்வனே செய்தால் போதுமென்று நினைக்கிறார்கள். அவர்களுக்கு அக்குழந்தைகளைக் கல்வி பயிலச்செய்யவேண்டுமென்னும் கவனமே இருப்பதில்லை. இப்படி இருந்தால் எப்போது நம்நாடு முன்னேற்றம் அடையும்? தமிழ்நாட்டுச் செல்வர்களே! உங்கள் சகோதரரைக் காப்பாற்றுங்கள். அவர்கள் அஞ்ஞான நிலையில் இருக்கும்பொழுதும், மிருகத் தன்மையில் இருக்கும் பொழுதும் நாம் வாளா இருப்பது தர்மமாகுமா? ஜீவகாருண்ணியத்தில் சிறந்த புண்ணியவான்களே! இக்கூலிகளை இலங்கைக்கு அனுப்புமுன் இவர்களுக்குப் போதிய கல்வி புகட்டி அனுப்புங்கள். சிறு குழந்தைகளை இந்தியாவிலேயே கல்வி கற்கச்செய்து அனுப்புங்கள். தோட்டங்களிலே சைவப் பிரசங்கங்களையும், பேருண்மைகளைக் காட்டும் விஷயங்களைப் பற்றிய விரிவுரைகளையும் மாதம், மாதம் கல்வி அறிஞர்களாலே நிகழ்த்தும் முறைகளை நிறுவிவையுங்கள். குழந்தைகள் 12 அல்லது 15 வயது வரைக்கும் கட்டாயமாகப் பள்ளிக்கூடங்களில் படிக்கவேண்டுமென்னும் முறைகளை ஒழுங்கு பண்ணுங்கள். இப்படிச்செய்வது கல்வி அறிஞர்களின் கடமை. "தானங்கள் அனைத்திலும் கல்வித் தானமே மேலானது" என ஓர் ஆங்கிலப் பண்டிதர் கூறுகின்றார். இதுவே நம் நூல்களின் கூற்றுமாகும். "அறியாமை கடவுளின் சாபம். அறிவோ நம்மை மோட்சத்துக்கு எடுத்துச் செல்லும் சிறகுகள் போன்றது" எனவும், "எம்புத்திரரநேகர் வறுமையின் புதல்வர்களாயிருக்கிறார்கள். ஆனால் அவர்கள் அறியாமையில் வளர்க்கப்படாதபடி நாம் அவர்களைப் பாதுகாக்கவேண்டும்" எனவும் பெரியோர் கூறியிருக்கிறார்கள். ஆகையினால் சகோதரர்கள் இவ்விஷயத்தை நன்கு கவனிப்பார்களாக. இக்கூலிகள் வசிக்க நல்ல குடிசைகள் இல்லையென்று சில அறிஞர் தோட்டக்காரருடன் வாதாடியதன்மேல் இப்போது சில தோட்டங்களில், உள்ளவர்கள் நல்ல குடிசைகள் கட்டி வருகின்றார்கள். எனினும் நல்லசுகத்துக்கேற்ற முறைகள் அவ்விடங்களில் நிறுவப்படவில்லை. அவற்றுள், கல்வி முறை கவனிக்கப்படாதது பரிதபிக்கத் தக்கது. கல்வி அறிஞர்கள் இதனைக் கவனித்து நல்ல நிலைமைக்குக் கொண்டு வருவார்களாக. எல்லாம் வல்ல இறைவன் அருள்புரிவாராக.

செ. சின்னதுரை, ஏழாலை, யாழ்ப்பாணம்.

---

## பகவத்கீதை வசனம்.

(448-ம் பக்கத் தொடர்ச்சி.)

(மூக்குண கருமத்தின் சொரூபத்தை யுரைத்தருளிய பகவான் அம் மூக்குண கர்த்தாக்களின் சொரூபத்தையும் சொல்லப்புகுந்து சாத்துவிக கர்த்தாவின் சொரூபம் இத்தன்மையதென்று கூறுகிறார்.)

ஹே அர்ச்சுன! கர்மபலத்தில் இச்சையையும் அகங்காரத்தையும் அறவேயொழித்து, சர்வகர்மங்களிலும் உற்சாகத்தோடும் தைரியத்தோடும் நின்று, என்றும் தான் செய்யாநிற்கும் கன்ம பலன்களில் உண்டாகும் இலாப நஷ்டங்களில் இது இன்பம் இது துன்பம் என்றெண்ணி, ஒரு சிறிதும் சலிப்பில்லாத கர்த்தா எவனோ அவன் சாத்துவிகனென் றறிவாயாக. (சலிப்பின்மையாவது) இன்பதுன்பங்கள் காரணமாக முறையேவரும் முக மலர்ச்சியும் முகவாட்டமும் இல்லாத நிர்விகாரத்தன்மையாம்.)

(இராஜஸ கர்த்தாவின் சொரூபத்தைச் சொல்லுகிறேன் கேள்.)

பார்த்த! கர்மபலன்களை இச்சித்தலும், புத்திராதிகளிடத்தில் சிநேகமும், அற்ப அளவாவது ஒருவர்க்கும் ஒன்றையும் கொடாத லோபத்தன்மையும், தூய்மை இல்லாமையும், மனத்தின் கண் இலாப நஷ்டங்களில் முறையே சந்தோஷித்தலும் துக்கித்தலும் ஆகிய இவ்வித தன்மைகளோடு கூடி வாழ்பவர் எவரோ அவர் இராஜஸ கர்த்தர் என்று சொல்லப்படுவர்.

(இனித் தாமஸ கர்த்தாவின் சொரூபம் எத்தன்மையதென்பதையும் சொல்லுகிறேன் கேட்பாயாக)

ஹே கௌந்தேய! மனத்தைச் செய்யத்தக்க கர்மங்களில் சாவதானமாகும்படி அடக்குதலும், பெருமைபொருந்திய ஞானசாஸ்திரங்களை இவையே நமக்குப் பெருஞ் செல்வமென்று மனத்துட்கொண்டு கற்றலும், பெரியோர் அனைவரும் சந்தோஷிக்கும்படியான வணக்கமும் ஆகிய இவை முதலிய குணங்களில் ஒன்றும் இல்லாமல், ஒருதினத்தில் முடிக்கத்தக்க காரியத்தை ஒருமாதகாலத்திலும் முடிக்கமாட்டாதவர் எவரோ அவர் தாமஸ கர்த்தாவென்று கூறப்படுவர்.

(இவையே மூக்குண கர்த்தாக்களின் சொரூபம். இனி அந்த மூக்குணங்களின் புத்திசொரூபமும் அறியவேண்டுதலின் அவற்றையுந் தெரிவிக்கிறேன் கேட்பாயாக வென்று பகவான் புகலத் தொடங்குகிறார்.)

ஹே பார்த்த! "உத்தமமாகிய துறவற இல்லறங்கள் இப்படிப்பட்டவை, மோக்ஷபந்தங்க ளிப்படிப்பட்டவை, நல்வினை தீவினை (காரியம், அகாரியம்) இத்தன்மையானவை, இவை அஞ்சத்தக்கவை இவை அஞ்சத்தகாதவை" என்று ஆராய்ந்து அவற்றை உள்ளபடியே அறியாநின்ற புத்தி எதுவோ அதுவே சாத்துவிக புத்தி.

(இங்கு மோட்சத்தை ஞானமென்றும், துறவறத்தை மோட்ச ஏதுவான நிவிர்த்திமார்க்கமென்றும், இல்லறத்தைப் பந்த ஏதுவான பிர

விர்த்திமார்க்கமென்றும், தேசகாலங்களை யபேட்சித்த கர்த்தவ்வியமும் அகர்த்தவ்வியமுமே காரியா காரியமென்றும், கர்ப்பவாசமுதலிய துக்கங்கள் அஞ்சத்தக்கவை, அவற்றிற் கெதிரிடையானவை அஞ்சத்தகாதவையென்றும், புத்தியாகிய கரணத்திற் கர்த்திருத்துவஞ் சொன்னது உபசாரம் என்றும் அறிதற்பாலன).

ஹே அர்ச்சுன! தர்மாதர்மங்களையும், செய்யத்தக்க காரியங்களையும், செய்யத்தகாதனவாகும் காரியங்களையும் உள்ளபடி அறிந்துகொள்ளாத அறிவே சந்தேக ரூபமான இராஜஸ புத்தியாம்.

அதர்மமாகத் தர்மத்தைப் பாவித்தலும், செய்யத் தகாதனவான காரியங்களைச் செய்யதகுங் காரியங்களாமென்று பாவித்தலும், துன்பத்தைத் தாாநின்ற சிந்தனையானது தீங்கான சர்வவிஷயங்களிலும் பிரவேசித்தலும் தாமஸ புத்தி யென்பர். (தமவினால் மூடப்பட்டமையின் தர்மமுதலிய சர்வபதார்த்தங்களையும் உள்ளபடி அறியாமல் விபரீதமாக அறியும் புத்தியே தாமஸ புத்தி என்க.)

[பகவான் புத்தியின் மூவகைத்தன்மையை யருளிச்செய்து இனித் திருதியின் மூவகைத்தன்மையை அருளிச் செய்யத்தொடங்கி, சாத்துவிக திருதியின் சொரூப மருளிச்செய்கின்றார்.]

மனத்தினாற் செய்யுங் கிரியைகள், நிலைபேறுடைய பிராணவர்க்கங்களினாற் செய்யுங் கிரியைகள், இந்திரியங்களினாற் செய்யுங் கிரியைகள் ஆகிய இச்சேஷ்டைகள் பாரமாய் அதிகரித்தாலும் கண்டுபொறுத்தலும், துவேஷியாமையும் சாத்துவிக தைரியமென்று கூறுவர்.

ஆசையினால் தரப்பட்ட சுவர்க்கமுதலிய பலன்களை அடையும்பொருட்டு அவைகட் கேதுவான தருமங்களைச் செய்து, தர்மம், காமம், அர்த்தம் என்னும் மூன்றுமே தமக்காவசியமாகச் சம்பாதிக்கத் தக்கனவென்று எண்ணி அவற்றைத் தரியாநிற்குந் திருதியானது இராஜஸ தைரியம்; புத்தியில் சோகம், களிப்பு, உறக்கம், பயம் என்பவைகளை எப்பொழுதும் விடாமற் பொருந்தித் தரியாநிற்குந் தைரியமானது தாமஸ தைரியம்.

[பூர்வம் குணபேதத்தால் கிரியாகாரங்களை மூவிதமாக அருளிச்செய்து இனி அக்கிரியாகாரங்களால் உளவாகாநிற்கும் சுகரூபமாகிய பலத்தின் மூவிதத் தன்மையை ஸ்ரீ பகவான் அருளிச்செய்யத் தொடங்கி இதில் சாத்துவிக சுகத்தை யருளிச் செய்கிறார்.]

ஹே அர்ச்சுன! அதிகாரிகளனைவருக்கும் ஞான வைராக்கிய தியான சமாதிகளின் ஆரம்பகாலத்தில், அத்தியந்தம் ஆயாச சாத்தியமாவதால், பிரசித்தமான விஷத்தைப்போல துன்பமாய், ஞானவைராக்கியாதிகள் பரிபாகமாகுமிடத்து இன்பமாய் அரிய அமுதமே என்று சொல்லத்தக்கது யாதோ அது சாத்துவிக இன்பமென்று கூறுவர் யோகிகள்.

(இனி ராஜஸ இன்பத்தின் சொரூபத்தைச் சொல்லுகிறேன் கேள்.)

ஹே பார்த்த! இந்திரியங்களுடனே விஷயங்களிற் சம்பந்தப்பட்டு அனுகூலமாக வெழுந்து பிரதம க்ஷணத்தில் அரியவமுதமென்று சொல்லலாவதாய், போகத்தின் முடிவில் வெறுப்பாய், விஷம்போற் பிரதிகூலமாகியே இருக்குஞ் சுகம் இராஜஸ இன்பமென்று பெரியோர் கூறுகின்றனர்.

(இராஜஸ இன்பம் இவ்வாறாக, தாமஸ இன்பம் எவ்வாறானதென்பதையும் அறிவிக்கிறேன் கேட்பாயாக.)

ஹே பற்குன! பூர்வ வினையின் பயனால் தொடராநின்ற நித்திரை, பிரமாதம், ஆலசியம் என்னும் இவற்றால் பொருந்தத் தோன்றினதாய் ஆரம்பகாலத்திலும், விரைவாய் முடிந்தகாலத்திலும் தனக்குக் கடனாக மோகத்தைச் செய்யாநிற்கும் இன்பம் எதுவோ அது தாமஸ இன்பமாம். பிரமாதம் என்பது சித்தத்தின் அசாவதானம் என்றுணரக்கடவாய்.

(இப்போது திரிகுணபேதங்களால் பூர்வாத்தியாயங்களில் ஓரிடத்தும் அருளிச்செய்யாத பதார்த்தங்களையுஞ் சங்கிரகஞ் செய்பவராய்ப் பூர்வஞ் சொன்ன பிரகரணார்த்தங்களை உபசம்ஹரித்துக் கிரியாகாரக பலரூபமான பிரபஞ்சமுழுவதும் திரிகுணாத்மகமாயின், பிராணிகட்கு முத்தி எங்ஙனுளதாமென்றவருஞ் சங்கையானது நீங்குதற்பொருட்டுத் தத்தம் அதிகாரத்திற்குத் தக்கபடி கர்மானுஷ்டான வாயிலாகப் பகவதாராதனத்தாலுளதாகும் அவரது கிருபையினாலடையப்படும் தத்துவஞானத்தினாலேயே முக்தியுளதாமென்னும் கீதார்த்தசாரத்தைச் சங்கிரகித்துத் தரிசிப்பவராய் இதுதொடங்கி அத்தியாயம் முடியும் பரியந்தம் வேறொருபிரகாரம் ஆரம்பிக்கின்றார்.)

ஹே தனஞ்சய! முன்னே 14-ம் அத்தியாயத்திற் சொன்ன சுபாவமென்னும் பிரகிருதியினாலுண்டாகாநிற்கும் இந்தச் சத்துவம், ரஜஸ், தமஸென்னும் மூன்று குணங்களையும் விட்டவர்கள் இந்தப் பிருதிவியிலாவது சுவர்க்கத்திலாவது ஒருவரும் இல்லை. பிராமணருக்கும், க்ஷத்திரியருக்கும், வைசியருக்கும், சூத்திரருக்கும் தத்தம் சுபாவங்களாலுண்டாகிய சத்துவமுதலிய குணங்களின் தன்மையினால் வந்த கர்மங்களின் கூறுபாடுகளை இனி அருளிச்செய்கிறேன் கேட்பாயாக.

(பிராமணாதியரின் சுபாவிக கர்மங்களைத் தெரிவிக்கின்றார்.)

(வரும்) சீடன்.

---

## அன்னதானம்.

நாம் முதல் முதலாகக் கற்கும் நீதி வாக்கியம் "அறஞ்செய விரும்பு" என்பது. இந்நீதியின் கருத்து நம்மனத்தின் கண் நன்கு பதியும் பொருட்டு இதே கருத்துள்ள "ஐயமிட்டுண்", "தானமது விரும்பு" என்னும் வாக்கியங்களையும் புகட்டியுள்ளாள் ஔவை. வேதங்கள், சாஸ்திரங்கள், புராணங்கள், இதிஹாஸங்கள் இவைகளின் தத்துவத்தை, ஔவையின் இரத்தினச் சுருக்கத்தின் வியாக்கியானமாகக் கொள்ளலாம். இளமை, செல்வம்,

அழகு, சாமர்த்தியம் இவைகள் அழியக்கூடியவையென்றும், ஒருவன் செய்யும் தருமமோ அவனுக்கு இம்மைக்கும் மறுமைக்கும் இன்பமளித்தலால், அதனை மறத்தலினும் கேடுவேறொன்றில்லை யென்றும், சகல நூல்களும், சுருக்கமாகவும், விளக்கமாகவும் தெரிவிக்கின்றன.

தருமம் முப்பத்திரண்டு பிரிவுகளுடையது. அவற்றில் அன்னதானம், அதாவது பசித்தோர்க்கன்னமளித்து, அவர் பசியைப் போக்குதல் ஒரு முக்கிய தருமம். "இல்லையேனு மிட்டுண்மின்" என்ற ஒளவையின் அமுத மொழியும், அன்னதானம் "சமம் நாஸ்தி" என்ற வடமொழியும் இதன் சிறப்பைத் தெரிவிக்கின்றன. சூதசங்கிதையிலும் அன்னம் ஜலம் இவைகளுக்குச் சமமான தானம் கிடையாதென்று சொல்லப்பட்டிருக்கிறது. முன் காலத்தில் முற்றத்துறந்த முனிவர்களும், "சிவனே தெய்வம்; சிவபக்தியே தருமுக்தி; சிவபக்தரை உபசரித்தலே நோன்பு, விரதம் முதலிய அனுஷ்டானம்; சிவப்பிரசாதமாகிய விபூதியே விலையுயர்ந்த பூஷணம்; சைவமதமே எவர்க்கும் சம்மதம், சம்மதமுமாகிய நன்மதம்" எனக் கொண்டு ஒழுகின அறுபத்திநான்கு நாயன்மார்களும் பசித்தோர் முகம் பார்த்து, அன்னங்கொடுத்தாதரித்தனர்; தன்னுயிர்போல் மன்னுயிரைக் காத்துவந்த முற்காலத்து மன்னர்கள் ஏழைகள் அன்புக்குப் பாத்திரமானது, அவர்கள் செய்துவந்த அன்னதானத்தினாலேயே. இந்த நீதி மன்னர் அநேக சத்திரங்கள் கட்டுவித்து அன்னதானம் செவ்விதின் நடைபெறுதற்குரிய ஏற்பாடுகள் செய்து வந்தனர். ஐரோப்பாவில் பல நூற்றாண்டுகளுக்குமுன், கிறிஸ்தவப்பாதிரிமார் ஆதீனத்தில் நடைபெற்ற மடங்கள் எல்லாம் ஏழைகளுக்கு அன்னசாலைகளாகவும், கல்விச்சாலைகளாகவும், தொழிற்சாலைகளாகவும் இருந்து, பசிப்பிணிக்கு ஸஞ்சீவியாகவும், அஞ்ஞான இருளை யகற்றும் விளக்காகவும், வாழ்வைப் பிரதிபிம்பிக்கும் கண்ணாடியாகவும் இருந்து வந்தனவென்ற விஷயம் நாம் அறியாததன்று.

ஏழைகளுக்கு அன்னமிடுவதால் நம் பொருள் செலவழிந்து நாம் வருந்த நேருமென்று எண்ணுவது சுத்தப்பிசகு. பிச்சையிட்டுக் கெட்டவன் இல்லை. பொருளையுடையவன் அதைப் பத்திரமாய் வைக்குமிடம் ஏழைகள் பசியைப் போக்குவதே. இதைத்தான் குறளாசிரியர்,

"அற்றா ரழிபசி தீர்த்த லஃதொருவன்
பெற்றான் பொருள் வைப்புழி"

என்றார். அவ்விதமில்லாமல் ஏழைகள் பசியோடு துடிப்பதைக்கண்டு சிறிது மிரங்காது தான் மாத்திரம் உண்பது யாசிப்பதிலும் கேவலம்.

பசியினால் ஏற்படும் கொடுமை சகித்தற்கரிது. பசியினால் பலக்குறைவு, தேக அசதி, தலைச்சுற்று, மனச்சோர்வு, ஞாபகக்குறைவு, தன் நினைவு மறதி முதலியவை ஏற்படுகின்றன. அப்போது எதுவாயினும் பட்சிக்கும்படி நேரிடுகிறது. நெப்போலியன் மாஸ்கோ தேசத்து யுத்தத்துக்குச்சென்று திரும்பிவரும்போது, உணவின்றிக் கஷ்டப்பட்ட சமயத்து, அவனும்,

அவனைச்சேர்ந்த சேனைகளும், வழியில் செத்து விழுந்த குதிரைகளையும், மனிதர்களையும் பட்சித்தார்களாம். பசியின் கொடுமையினால் பெற்றோர்கள் தமது சிசுக்களையும், புருஷர் ஸ்திரிகளையும் கொன்று தின்றதாக நாம் கேட்டிருக்கிறோம். அதுபற்றியே ஒளவை ஒருவனுக்குப் பசி ஏற்பட்டு விட்டால்,

"மானங் குலங்கல்வி வண்மை யறிவுடைமை
தானந் தவமுயர்ச்சி தாளாண்மை—தேனின்
கசிவந்த சொல்லியர்மேற் காமுறுதல் பத்தும்
பசிவந்தி டப்பறந்து போம்"

என்றாள். பட்டினத்தாரும் மனிதன் ஆடியோடித் திரிவதும், நெற்றி வேர்வை நிலத்தினில் வீழ உழைப்பதும் ஒருசாண் வயிற்றை வளர்ப்பதற்கே என்றார்.

பசித்திருப்போரைக் கண்டமாத்திரத்தில் மனம் உருகப்பெறாதார் மக்களுட்பதரே யாவர். இந்த ஜன்மாவில் உண்ண உணவும், உடுக்க உடையும், படுக்க இடமும், மனச்சமாதானமுமின்றி, தெருத்தெருவாய் "அம்மா பிச்சை, அய்யா பிச்சை" என்று கதறுவோர்கள் யாரென்றால், முன் ஜன்மாவில் மகத்தான ஐசுவரியத்துக்கு அதிபராயிருந்து, ஒருவர்க்கும் ஈயாமல் தாம் மாத்திரம், சந்திரவதனமும், இனியகுரலும், அன்னநடையும், விலையுயர்ந்த உடையும், மின்னல் சடையும் வாய்ந்த யௌவனமாதர், வளையல்க ளணியப்பெற்ற தமது மிருதுவான கரத்தேந்திய பொற்கிண்ணத்தில் பாலோடுகலந்த அன்னத்தைஊட்ட, பக்கத்திலுள்ளவர்களைக் கவனியாது அதை உண்ட உலுத்தர்களே. நாம் பிறர்க்குக் கொடாமல் நமது காரியத்தை மாத்திரம் பார்த்துக்கொண்டால், அடுத்த ஜன்மாவில் நமக்கு வறுமைச்சீட்டே யளிக்கப்படும். கர்ணன் தனது அந்தியகாலத்தில் தான் அடைந்த புண்ணியத்தையும் ஈந்தனன். அந்தணனுருக் கொண்டுவந்து யாசித்த கண்ணபிரான், இவன் செய்கையைக் கண்டதிசயிக்க நேர்ந்தது. அதனாலப்பெருமான் கர்ணனை நோக்கி, 'உனக்கு யாதுவரம் வேண்டு' மென வினவ, கர்ணன், "கிருஷ்ணா, நான் எவ்வளவு ஜன்மங்களெடுத்த போதிலும், என்னை யடுத்து இல்லை யென்றுரைப்போர்க்கு, இல்லையென் றுரையாத தரும சிந்தனையை நீ கொடுத்தருள்" என விடை பகர்ந்தனன்; என்னே கர்ணனது தரும சிந்தை.

ஏழைகளுக்கு அன்னம் அளித்தல் முழுமனத்துடனிருக்கவேண்டும். பிறர் புகழ்தற்பொருட்டுச் செய்யும் தருமமும், வயிற்றெரிச்சலுடன் கொடுப்பதும் மனிதத்தன்மையன்று. கொடுப்பது உபசாரத்துடனும், சந்தோஷத்துடனு மிருக்கவேண்டும்.

"உண்ணீருண் ணீரென் றுபசரியார் தம்மனையி
லுண்ணாமை கோடி பெறும்" (ஒளவை)

"இருக்கு மிடந்தேடி என்பசிக்கே அன்னம்
உருக்கமுடன் கொண்டுவந்தா லுண்பேன்" (பட்டினத்தார்)

"ஒப்புடன் முகம லர்ந்தே யுபசரித் துண்மை பேசி
உப்பிலாக் கூழிட் டாலு முண்பதே யமுத மாகும்
முப்பழ மொடுபா லன்னம் முகங்கடுத் திடுவா ராகிற்
கப்பிய பசியும் போக்கிக் கடும்பசி யாதல் நன்றே.

(விவேகசிந்தாமணி)

என்னும் நீதிகளை மறக்கக்கூடாது.

இனிமேலாவது நாம் நம்நாட்டில் பசித்தோர்க்கு அன்னங் கொடுத்து வரும் முன்னைய வழக்கத்தை மறவாமல் கைப்பற்றிவர முயல்வோமாக.

கொடுப்பாரைத் தடுப்பார் தொகையும் குறைதல் வேண்டும். யாசிப்பவர்களின் பூர்வகதையை விசாரித்துப்பின் 'இரத்தலின் இன்னாததொன்றில்லை' என்னும் விஷயத்தைப்பற்றிப் பிரசங்கித்தல் அதிகப்பிரசங்கித்தனமும், அசட்டுத்தனமுமேயாகும். பிச்சைக்காரர்களை வேலையாளைவிட்டாவது, நாய்களைவிட்டாவது துரத்துதல் ஓர் பெரிய பாதகச்செயலேயாகும். ஆகையால் ஒவ்வொருவரும் அன்னதான மகிமையை யறிந்து பசித்தோர்முகம் பார்க்கவேண்டும். அதுவே சகோதரபாவ வழிகாட்டி என்பதை யறியவேண்டும். ஏழைகளுக்குத் துன்பம் உண்டாக்காமல், அவர்கள்மாட்டு அன்புடனும் ஆதரவுடனும் ஒழுகல் வேண்டும். எளியவர்க்கன்பான கடவுளுக்கு, ஏழைகளிடத்தில் நாம் அன்பாயிருத்தலே பிரீதி என்பதை நன்குணரவேண்டும். இந்நீதிகளையறிந்து ஏழைகளின் அன்புக்குப் பாத்திரராகி வாழ்தலே சிலாக்கியம். அதுவே பெறுதற் கரியதோர் பாக்கியம். இந்நீதிகளையே போதிக்கின்றது "ஆனந்தபோதினி" போன்ற பத்திரிகைகள். இவைகளை அறியாமல் வாழ்தல் யோக்கியம் ஆகாது.

என். சுப்பிரமணிய அய்யர் B. A.
கிழக்குரதவீதி, நாகர்கோவில்.

---

## தருமம்.

இப்பூவலயத்தின்கண் மக்கள் மாண்புறத் தம் வாழ்க்கையை நிகழ்த்தற்குத் தருமம் சிறந்ததோர் சாதனமாகின்றது. தருமாதருமங்க ளிரண்டிலும் முற்பட்டது எய்துதற்கரிய புண்ணிய இலாபங்களையும், பிற்பட்டது அழிவிலாத் துன்பத்தையுங் கொடுப்பனவாகும். இயமவாதனைகட்கிலக்குறச்செய்வது அதருமமும் சுகபோகங்கட் கிட்டுச்செல்வது தருமமுமாகையினால் மன்பதைகள் தருமநெறியிற் பீடுபெற முயலவேண்டுவது இன்றியமையாததாகும். தருமம் நிலைபெறாவிட்டால் வருணாச்சிரம தருமங்கள் தலைகாட்டா தொழிவதன்றி உலகம் பலவிதநெறியுடைத்தாய் உய்தற்கு உபாயமின்றி அவமே அழிவதுமாம். இவ்வுண்மையைக்கொண்டே பல முனிசிரேட்டர்களும் மதாச்சாரியர்களும் தருமத்தை நிலைபெறச்செய்யத் தம்மாலான நன்முயற்சியைக் கைக்கொள்வாராயினர்.

தருமத்தைவிடாது இயற்றிக்கொண்டே வரவேண்டுவது மானிடர்க்

குற்ற கடமையெனச் சிறப்பாய்க் கூறப்படும். தருமத்தைக் கைவிட்டவன் பாபியாகவும் ஈசனது அனுக்கிரகத்துக் கியையாதவனாகவும் கருதப்படு வான். ஒவ்வொருவனும் தான் தான் செய்யவேண்டிய கருமத்தைப் போற் றிக்கொள்ளவேண்டுமென்பது பன்னூல்களானும் அறிவின் மிக்க ஆசிரியர் களாலும் நன்கு தாபிக்கப்பட்டிருக்கின்றது. அம்மகிமைவாய்ந்த தருமம் என்று கூறத்தகுந்தது யாசகர்கட்குக் கொடுக்கும் தருமம்மட்டுமே யென் றுணர்தல் தவறும். தருமம் எனில் கடமை எனப் பொருள்கொண்டு இஞ் ஞாலத்துச் செய்யக்கிடந்த காரியங்களைச் செய்து முடித்தலே தருமம் இயற்றுதல் என்று கூறலாம். அங்ஙனங் கூறவே தருமங்கள் என்று சிறப் பாய்க் கூறப்படும் இரண்டு தலையிட்ட அவ்வாறைந்தும் அடங்குதல் காண்க. எவ்வெவ்வாற்றில் எவனெவன் எவ்வெக்கருமங்களைச் செய்தல் வேண்டுமோ அவ்வவ்வாற்றில் அவனவன் அவ்வக்கருமங்களைச் செய்து முடித்தலே மறுவின்றிய தருமமாகும். இக்கூறப்பட்ட தருமம் எவ்வாசிர மத்தினர்க்கும் இன்றியமையாததாகும். ஆயினும், இல்லற நடாத்துமவரே ஏனைய மூவர்க்கும் சிறந்த ஆதாரவளிப்பவர்களாகலின், அவர்கட்கே தரு மத்தை நிலைபெறச்செய்தல் பெரிதும் அவசியமாகின்றது.

உலகத்தினர் செய்யவேண்டும் தருமங்களைப்பற்றி விரிவா யெடுத் துரைக்கும் நூல்கள் பலவுள. அவற்றின் வழிநின்று வாழ்க்கையைப் பய னுறச் செய்பவனே தருமத்தை நிலைபெறச் செய்பவனாவான் என்பது கூர்ந்துரைக்கத்தக்கது. அத்தகையோனுக்கே தருமத்தினாலுளதாம் பயன் வந்துறுமேயன்றிப் போலித்தருமங்களை நிகழ்த்துபவர்க்கன்று. தம்பேர் அழியாமைக்கென மாசற்ற மனத்தினராய்த் தருமமென்று கூறிக்கொண்டு வேண்டி வினைகளைப் புரியும் வீணர் உண்மையான தருமத்தை யறிந்தவ ரன்று; தருமத்தின் பயன் அவர்க்குண்டாவது மில்லை. எனவே, காலனு ஞத் துன்பங்கள் அவர்களைத் தொடர்வனவாம் என்பது வெளி. வேதாகம சாஸ்திரபுராணேதிகாசங்களைத் தூடணம் செய்பவராய்த் தருமத்தில் நம் பகம் இல்லாது அலைமனம் அழுக்குடையாராய் அவமே போவார் ஒரு போதும் சம்சாரசாகரத்தினின்றும் கரைசேர்வதில்லை என்பது திண்ணம். முத்தியாங்கரை சேர்வதற்குப் பிரயாசை யெடுப்பவர் மறுவிலா மனத்தின ராய் உலகத்திற்கொப்பத் தருமத்தையே செய்து வருவார்கள். அவ்வாறு தருமத்தை அனுட்டித்து மனமாசறுத்தோர் நாளாவர்த்தியில் சர்வசங்க பரித்தியாகிகளாய்க் கருப்பைபுகாப் பாக்கியத்தை யடைவதில் சிறிதேனும் ஐயமில்லை.

இத்தருமத்தைக் கைக்கொள்ள விரும்புவோர் மிக்க நீதியுடையராய் உலகத்தோடொட்ட ஒழுகக் கற்றுக்கொள்ளல் வேண்டும். நீதியை யன் றித் தருமம் முக்காலத்துமில்லை யாகலின் நீதியுடையார்க்கே தருமத்தில் உரிமை உண்டு என்பது செவ்வனே இலகும். உலகத்திற் சற்றும் பற்று வையாராய்த் தாம் செய்யவேண்டியவற்றை 'நாம் செய்கின்றோம்' என்னும் அபிமானமின்றி இவைகளையே எவுதற்றொழில் புரிபவராகக்கொண்டு

அன்னோனுக்கே அந்தக்காண சுத்தியடைந்து அர்ப்பணமாய்ச் செய்ய வேண்டும். எக்கருமத்தினும் தருமம் தாபித்தலைழக்க விரும்பிய ஒருவன் கடவுளருள் விளங்கப்பெற்றவனுகின்றான் என்பது பெறப்படுகின்றது. எத்தொழில் புரியினும் தருமமே தலைகாட்டுமாறு மனத்தைச் செலுத்து பவனே உலக இச்சைகள் அரங்கைதப்படுத்தலின்று. இறைவன் தருமமே சொரூபமாக வுடையானுகலின் தருமமுடையோர்க்கு அவன் எளிதில் இசைகிறான். தருமமிக்க புண்ணியர் கூறும் மொழிகளே இறைவன் வார்த்தைகளாம் என்பதற்குச் சிறிதும் ஐயப்பாடிலது. எத்துணை வறிய ராயினும் தருமநிலைக்கப்பெறின் அன்னோரே செல்வமுடைய மக்கள் ஆவர். பொன்மணங் கமழும் குடிப்பிறந்தோராயினும் தருமநிலையாவிடத்து அவர் கள் வறியரினும் வறியரேயாவர். செல்வமிருந்தென்ன பயனைச்செய்யும்? அறம் மிகுந்தன்றே மோக்ஷமாஞ் செல்வத்தைக் கொடுக்கும்? இஃதுணரா தார் தருமத்தை இகழ்தல் இயல்பே இயல்பே. அவர்கள், தங்கள் மனம் நல்வழிதேடி அதனூடே செல்லற்குப் பக்குவமடையுங்காறும் தருமத்தை இகழ்ந்து களியாடுவர்; அதருமத்தையே கைக்கொள்வாராவர் என்பது அறிவுடையோர் அறியற்பாலது. தருமமின்றேல் உலகமுமின்று.

இத்தகைய தருமம் நிகழவேண்டுமாயின் செல்வமிகுதியாக உடை யார் மனம் நல்வழிக்குத் திரும்புதல் அகத்தியமாகின்றது. எழ்மைத்தன் மையை யடைந்தோர் கூற்றை உலகம் பின்பற்றாது என்னு முண்மை யாவ ரும் அறிந்ததன்றே! ஏழைகளாயுள்ளோர் தருமத்தை உள்ளவாறு இயற்றி டினும் ஏனையோர் அதனைப் பின்பற்றுதல் பெரும்பான்மையும் இல்லையாக லின் அவர்கட்குமட்டுமே அத்தருமம் உளதாகின்றது. செல்வம் படைத் தோர் தருமத்தைச் செய்து காட்டுவாராயின் உலகம் அதை யாதரித் தொழுகும். அன்றியும், அவர்களது செல்வம் எத்தருமத்தையும் இசையப் புரியுமா றுடனின்றுதவும். ஏழைமாக்கட்கு இவ்வுதவியில்லாமற் போய்விடு கின்றது என்பதை யாரே உணரார்? ஆகவே, உலகம் தருமத்தை வேண்டு கின்றதென்பதை அகத்துன்னி அதை யனுட்டிக்கும் கடப்பாடு யார்க்கு முளதெனல் மிகையன்று. தருமத்தினையுடையோர் இறைவனை யணுகு கிறார்கள். தருமத்தையின்றி இறைவனுமுளனோ?

ராம சுப்பிரமணிய நாவலர், பத்மநாபபுரம்.

---

## தலைகீழ் வியாபாரம்.

இந்தத் தலையங்கத்தைப் பார்த்தவுடன், "தலையங்கமே 'தலைகீழ்' என் றிருப்பதால் இது வாசிக்கத்தகுந்ததல்ல" வென்று நேயர்கள் என்னை உதா சினம் செய்யாமல் பொதுநன்மைக்காகவாவது இதனை வாசித்து நன்மை யுண்டாக்குமாறு கடவுளைப் பிரார்த்திக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

சகோதர சகோதரிகளே! நீங்கள் அனேகமாய் எல்லீரும் கடைத் தெருவுகளுக்குப் போயிருப்பீர்கள். அங்கே துணி முதலிய சரக்குகளைச்

சிலர் ஏலம் போடுவதைக் கவனித்திருப்பீர்கள். அதுபோலவே ஆடு மாடுகளையும் மொத்தமாக ஏலம் போடுவதையும் பார்த்திருப்பீர்கள். இன்னொரு ஏலம் சிலவிடங்களில் நடக்கிறது; அதையும் கவனித்திருப்பீர்கள்; எனினும் மறந்திருப்பீர்கள். ஆதலின் இப்போது நம் ஆனந்தபோதினி வாயிலாக அதனை வெளியிடுகிறேன்:

இப்புண்ணியபூமியாகிய பாரதநாட்டின்கண், தென்பாரிசத்தில், இந்த ஏலம் பிராம்மகுலத்தவரால் பிரபலமாக நடைபெற்று வருகிறது; ரொம்பவும் நேர்த்தியானது! கேட்கத் தகுந்தது!! தைமீ முதல் ஆனிமீ முடிய மேடைகள் தனித்தனி தயார்செய்யப்பட்டு அவற்றின்மேல் ஏலச்சரக்குகள் நிறுத்தப்படும். சொத்துக்களுக்குடையவர்கள் ஏலம் நடத்துவார்கள். சொத்துக்களின் மதிப்பு சமயம்போல் இடம், பொருள், ஏவல்களை யனுசரித்துத் தீர்மானிக்கப்படும். ஷை சொத்துக்களை ஏலத்தில் எடுக்கக்கூடியவர்கள், தங்கள் யோக்கியதையை எண்ணாமலும், எதிர்கால உணர்ச்சியில்லாமலும், ஆயிரக்கணக்காகத் தொகையை ஏற்றிப் பணம் கொடுத்து வாங்குகிறார்கள். ஏல நிபந்தனைகளின்படி சொத்துக்களை ஏலத்தில் எடுத்தவர் ஏலத்தொகை மட்டும் கொடுத்தால் போதாது; கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட இந்த உலகம் விருத்தியடைதற்கேதுவானதும், சாஸ்திர சம்மதமானதும், அருமையிலும் அருமை வாய்ந்ததுமான ஒருபொருளையும் கொடுக்கவேண்டுமாம். இன்னும் ஏலம் எடுத்தவர், சரக்குவிஷயமான எல்லாச் செலவுகளுக்கும் உட்படவேண்டுமாம். இதென்ன ஆச்சரியமாயிருக்கிறது! ஒரு அருமையான பொருளையும் கொடுத்து எல்லாச் செலவுகளும் செய்வதுமல்லாமல் ஆயிரக்கணக்கான ரூபாயும் ரொக்கமாய்க் கொடுக்கிற வியாபாரமாகிய இதைத்தான் தலைகீழ் வியாபாரம் என்று சொன்னோம். யோசித்துப்பார்த்தால் இந்த வியாபாரத்தில் பலன் ஒன்று விசேஷமாயிருக்கிறது. என்ன பலன் என்றால், இந்தமாதிரி ஏலத்துக்கு இரண்டுமுறைபோய் உடன்பட்டால் இலக்ஷுமியின் தமக்கையை வீட்டில் பிரத்தியக்ஷமாய்த் தெரிசிக்கலாகும்.

இதைப் படிப்பவர்களாகிய நீங்கள் நான் சொல்வது அர்த்தமாகவில்லை என்று என்னை நிந்திப்பீர்களாகையால் உங்கள் நிந்தனைக்குப்பயந்து வெளிப்படையாகவே அதைச் சொல்லிவிடுகிறேன். அதுயாதெனில் பிராம்மணருக்கு முக்கியமான விவாஹமாதங்களாகிற உத்தராயண கல்யாண மேடையில் பிராமணர்கள் தங்கள் மக்களாகிய வரர்களென்னும் சரக்குகளை நிறுத்தி, பெண்வீட்டுக்காரர்கள் போட்டியின்பேரில் கண்ணை மூடிக்கொண்டு ஆயிரக்கணக்கான ரூபாய்களை ஏற்றி, ஏலத்தொகை என்கிற வரதக்ஷிணையைக்கட்டி வாங்குவதுதான். இதுதான் நாம் கூறிய ஏலம். ஒருவரிடத்தில் ரூபா 1000 வரதக்ஷிணைக்கு இசைந்த ஒருவர் ரூபா 2000 வேறு இடத்தில் வருவதானால், முன்னதைவிட்டு அதற்கு உடன்படுவதால் இது ஏலம் என்று கூறலாயிற்று. இப்படி மாப்பிள்ளைக்கு வரதக்ஷிணை கொடுப்ப

துடன் விவாஹத்தில் சாப்பாடு, மேளம், புரோகிதம், தக்ஷிணை, தேங்காய், பழம், சாமக்கிரியைகள் முதலான செலவுகளும் பெண்வீட்டுக்காரர்தான் செய்யவேண்டும். 2, 3, பெண்களைப் பெற்றவன் இந்த ஏலத்தைக் கவனித்து இதில் இறங்கினால் இலக்குமியின் தமக்கையாகிய மூதேவியை அணுகித் தரித்திரத்தைப் பலனாக அடைகிறான். "நான்கு பெண்களைப் பெற்றவன் நாதாங்கி மூளையை விற்றவன்" என்ற பழமொழியும் இதுபற்றியே வழங்குகின்றது. இந்தக்கஷ்டம் காரணமாக ஒரு கெர்ப்பஸ்திரீ பிரசவித்ததும், குழந்தை ஆணா பெண்ணா என்று வெளியி விருப்பவர்கள் கேட்கும்போது, பிறந்தது பெண்ணாயிருந்தால் உள்ளிருப்போர் "பெண் தான்" என்று நாவால் அலக்ஷியமாய்ச் சொல்லிக் காட்டுவதுண்டு. பிர்ம்மசர்யம், கிருஹஸ்தாஸ்ரமம், வானப்பிரஸ்தம், சன்யாசம் என்கிற நான்கு ஆஸ்ரமங்களுள் கிருஹஸ்தாஸ்ரமம் பலவிதங்களால் மற்றவைகளைவிட மேலானதென்று மஹான்கள் கூறியிருக்கிறார்கள். இத்தகைய கிருஹஸ்தாஸ்ரமம் வம்சவிருத்திக் கேதுவானது. இதனை அடைந்தோர், வம்சவிருத்திக்குத் தக்க கன்னியைப் பருவத்தில் அடையவேண்டும். ஆதலால் ஒரு கன்னியைப் பயந்த ஓர் உத்தமபுருஷர், பெண்கொள்வோர்க்குச் சிரேஷ்டமான இந்த ஆஸ்ரமத்தையும், சந்தானத்தையும், சுகபோகத்தையும், கொடுக்கக்கூடியவரா யிருக்கிறார். அன்னவரிடத்தில் பெண்கொள்வோர் பொருளாசைப்பட்டு அன்னவர் மனது புண்படும்படி செய்வது பேதைமையிலும் பேதைமையே. அந்தோ! பரிதாபம்! சிலர் தங்கள் பிள்ளை பி. ஏ. பரிக்ஷையில் தேறி, பி. எல். பரீக்ஷைக்கு வாசித்துக்கொண்டிருந்தாலும், அப்பிள்ளைக்கும் பெண்ணுக்கும் பொருத்தங்கள் முற்றும் சேராமலிருந்தாலுங்கூட பெண்வீட்டார் ரூபா 5000 கொடுப்பதானால் அத்தொகைக்கு அப்பிள்ளையை விற்றுவிடுகிறார்களே! தங்கள் புத்திரர்களின் க்ஷேமத்தையல்லவா பெற்றோர்கள் கோரவேண்டும். சில ஜோசியர்கள் பெண்வீட்டாரிடம் 400, 500 ரூபாய் தரகுவாங்கிக்கொண்டு எப்படியாவது மாப்பிள்ளை வீட்டாருக் குபதேசஞ்செய்து மாப்பிள்ளையைப் பெண்ணுக்குச் சேர்த்துவிடுகிறார்கள். செவ்வாய் தோஷம் குரூரமாயிருந்தாலும் நாலாம்பாதம் என்றும், அதற்கு விலக்குகள் இருப்பதாகவும் கவிகளைச் சொல்லிப் பொருள்களைத் தாறுமாறாகப் பிதற்றி, சவ்டால் அடித்துப் பொருத்திவிடுகிறார்கள். இவ்விருதிறத்தாரின் விவேகம மெச்சத்தகுந்தது. இவர்களுக்கும் தரகாளிகளாகிய ஜோசியருக்கும் ஈஸ்வரன் என்ன பலன்களை அளிப்பாரோ?

அற்பமான தொழிலைச் செய்கிற சிறுவனும் ரூபா 500க்குக் குறையாமல் வரதக்ஷிணை கேட்கிறான், இவனே இப்படியிருந்தால் பெரிய தொழிலில் அமர்ந்திருப்பவனும், அமர லாயக்குள்ளவனும் எவ்வளவு கேட்பான் என்பது நான் சொல்லவேண்டுவதில்லை. பெண்களை அதிகமாகப் பெற்றவர்கள் இதனாலேயே பாபர் ஆகிவிடுகிறார்கள். இவ்வாறு ஒரு குடும்பத்

யைத் தரித்திரத்துக்குள்ளாக்கியாவது அக்குடும்பத்தாரிடம் பணம் பறிக்கும் கருத்துள்ளவர்கள் பகல் கொள்ளைக்காரர்களேயாவர்; இந்த அசம்பாவிதமான செய்கைகளுக்கு உட்படாதவர்களும் இருக்கிறார்கள். ஆனால், அவர்கள் ஒரு பெரியமலையில் 5, 6 வைரக்கற்கள் இருப்பதுபோல இருக்கிறார்கள். ஆயிரக்கணக்காக வரதக்ஷிணை வாங்குகிறவர்களுக்கு அந்தப் பணத்தைவைத்து வசிக்கச் சொந்த வீடு கிடையாது; அதைப் போட்டுப் பந்தோபஸ்து செய்யப் பெட்டியுங் கிடையாது; இந்நிலையில் அவர்கள் பெண்வீட்டாரிடம் "பெண்ணுக்கு ஆர்மோனியம் வாசிக்கத் தெரியுமா?" "பெண் இங்கிலீஷ் வாசித்திருக்கிறாளா?" என்கிற கேள்விகளும் கேட்கிறார்கள். இவற்றால் பெண்ணைப் பெற்றவர்கள் "மாப்பிள்ளைக்கு மிருதங்கம் அடிக்கத் தெரியுமா?" என்றும், "பெண் இங்கிலீஷ் படித்து மாப்பிள்ளைக்குப்பதிலாகக் கசேரிக்குப்போய்த் துரையுடன் பேசிவரவேண்டுமா?" என்றும் பல பிரதி உத்தரங்களைக் கேட்க இடமுண்டு. எனினும் அவர்கள் அவ்வாறு கேட்டால் பெண்களின் கலியாணம் நின்றுபோய் விடுமே என்ற பயத்தால் வேறுவிதமாகப் பதில் சொல்லத் தொடங்குவார்கள். அப்படிச் சொல்வதிலும் "அவையெல்லாம் தெரியாது; அவள் குடும்பத்துக்கு அடங்கினபெண்; சாதாரணமாய் அவளுக்குக் குடும்பத்துக்கு வேண்டிய பத்திமார்க்கமான சீதாகலியாணம், ருக்மணி கலியாணம், நலங்கு, ஊஞ்சல், பத்தியம், ஓடம் முதலான பாட்டுகள் பாடத்தெரியும், தவிர இராமாயணம், பாகவதம், பாரதம் முதலிய புஸ்தகங்களை அவள் கடகட வென்று வாசிப்பாள்" என்பார்கள். இவற்றைக்கேட்டு மாப்பிள்ளையாகத்தக்கவர் "நான்சென்ஸ் ஆன்சர் டு மை கொஸ்ச்சன்" என்று மீசையை உருவிக்கொண்டு மேஜையின்மீது ஒரு அடி அடிப்பார். அப்போது கேட்போர்க்குக் கர்ப்பம் கலங்கிவிட்டதுபோலிருக்கும். என்னே கலிகால கலியாண வியாபாரம்! என்னே இவர்கள் குடும்பத்தின் கோலம்!! இந்தச் சம்பவங்களுக்கு மூலம் "பெண் ருதுவாகிறதற்கு முன்னரே அவளுக்கு விவாஹம் ஆகவேண்டும்" என்னும் கொள்கையை வைத்திருப்பதே. இந்தச்சட்டம் பிறந்தபோது வரதக்ஷிணை வாங்கக்கூடாதென்கிற சட்டமும் கூடப் பிறக்கவில்லையே என்று விசனிக்கவேண்டி யிருக்கிறது. (தொருடம்)

2279 செ. சந்தாதாரர், T. V. நாராயண சுவாமி அய்யர்.

---

## அம்பாலிகை அல்லது அதிசய மரணம்

(454-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஆன:—எனக்கும் அக்கரையில்லை, இந்த அமிர்தம்மாளைப்பற்றி யுனக்கென்ன தெரியும்?

அம்:—இம்மாது கறுப்பண்ணனுடைய அண்ணன் மகளாம்.

ஆன:—அது பொய். அம் மனுஷியைப்பற்றிய கதை வேறேயிருக்கிறது. அதை யிப்போது கூறலாகாது. நீ சவக்குழியிலிருந்து எடுக்கப்பட்டது முதல் நடந்த சங்கதிகள் யாவும் கூறவேண்டும்.

அம்பாலிகை "அப்பா! அதை நினைத்தாலும் தேகம் நடுங்குகிறது" என்றாள்.

ஆன:—நீ யதை நினைக்கும்போது நடுங்கவேண்டிய காரணமேயில்லை. ஏனெனில் உன்னை யந்த ஆபத்திலிருந்து காப்பாற்றச் சினேகிதர்கள் ஆயத்தமாயிருந்தார்கள். ஆனால் அத்துஷ்டர்கள் சற்று முன்பே மிஞ்சிக்கொண்டார்கள்.

அம்:—என் காதலராகிய என் மைத்துனருக்கு நான் உயிரோடிருக்கின் றேன் என்ற சங்கதி தெரியுமோ?

ஆன:—நான் கூறியதால் அவனுக்கு நீ யுயிரோடிருக்கிறாயென்ற பூரண நம்பகம் இருக்கிறது.

அம்பா:—அப்படியாயின் நான் தம்மிடம் உடனே யேன் வரவில்லை யென்று அவர் வியப்படையவில்லையோ?

ஆனந்த:—நீ இங்கு சிறைவைக்கப்பட்டிருக்கிறாயென்று அவன் எண்ணிக் கொண்டிருக்கிறான். நாங்களும் அப்படியே யெண்ணியிருக்கிறோம். அதோடு நீ தன் உண்மையில் எள்ளளவேனும் சந்தேகம் கொள்வா யென்று அவன் கனவிலும் கருதவில்லை. என்வரையில் நான் அதை யவனுக்கு வெளியிடவேமாட்டேன்.

அம்பா—நீ கூறுவதனைத்தும் உண்மையாயின் நான் பெரிய படுமோசத் திற் சிக்கிக்கொண்டிருக்கிறேன்.

ஆனந்த:—நான் கூறுவதனைத்தும் ஆண்டவனறிய முழுதும் உண்மையே. உன்காதலன் மிக்க சத்தியவானும் யோக்கியனுமான மகா உத்தமன். நீ நம்பிய கறுப்பண்ணன் படுமோசக்காரனாகிய கொலைபாதகன். அதுமட்டுமல்ல. அவன் உண்மையாகவே கொலைசெய்த குற்ற வாளியே.

அம்பா:—என்காதலரே என்னைக் கொலைசெய்ய முயன்றவரென்றும், கறுப்பண்ணனே என்னைக் காப்பாற்றியவனென்றும் நம்பும்படி யெனக்கு அறிவித்திருக்கிறார்கள்.

ஆனந்த:—இன்னும் மற்ற சங்கதிகளையும் விவரமாய்க்கூறு.

அம்பா:—நானும் என் மைத்துனராகிய மனோகாரும் பாலியம்முதல் ஒருவரை யொருவர் மிக்க அன்போடு நேசித்திருந்தோம். பிறகு எங்கள் சினேகிதமானது காதலாய் மாறிவிட்டது. எங்கள் இருவருக்கும் மணம் புரிவதென்று என்தந்தையே தீர்மானித்துவிட்டார்.

ஆனந்:—ஆம். ஆம். மனோகானே யிவையாவும் எனக்குக் கூறினான்.

அம்பா:—என் தந்தை அவர்மேல் மிக்க அன்புவைத்திருந்தபடியால் நான் இறந்துபோய்விட்டால் ஆஸ்திமுழுமையும் மனோகானே யடைய வேண்டியதென்று என் தந்தை மரணசாசனம் எழுதிவைத்தார்.

ஆனந்த:—அத்தகைய மரணசாசனம் எழுதப்பட்டதென்று உனக்கு யார் கூறியவர்?

அம்பா:—கறுப்பண்ணன்.

ஆனந்த:—நீ யந்த மரணசாதனத்தைப் பார்த்தாயா?

அம்பா:—நான் பார்க்கவில்லை.

ஆனந்த:—அது அடியோடு பொய். கறுப்பண்ணன் உன்னை யேமாற்றவே

யிம்மாதிரி கூறியிருக்கிறான். உன்தந்தையின் மரணசாசனத்தில் மனோகரனுக்கு அனுகூலமானது ஒன்றுமேயில்லை.

அம்பா:—அப்படியாயின் அதற்காக அவர் என்னைக் கொல்ல முயல்வதில் ஒரு பிரயோசனமுமில்லை.

ஆனந்:—சந்தேகமின்றி யொரு பயனுமில்லை. அப்படி நீ மரணமடைவதால் தனக்கு ஆஸ்திமுழுதும் கிடைப்பதாயினும் மனோகரன் அதற்காக ஒருவரைக் கொல்லக் கனவிலும் நினைப்பவனல்ல.

அம்:—அப்படியிருந்தாலும் என்காதலர் எனக்குத் துரோகம் செய்தது செய்ததே.

ஆன:—எந்த விஷயத்தில் உனக்கு மனோகரன் துரோகம் செய்தான்?

அம்:—ஏன்? இன்னொரு கன்னிகையை மணம் புரிந்துகொண்டதால்.

ஆன:—இது அடியோடு பொய்.

அம்:—இந்த ஒருவிஷயத்தில் மட்டுமாவது கறுப்பண்ணன் எனக்கு நம்பகமாய் ருசுப்படுத்திவிட்டிருக்கிறான்.

ஆன:—எப்படி?

அம்:—மனோகாருக்கும் இன்னொரு கன்னிகைக்கும் மணச்சடங்கைச் செய்வித்த குருவினிடம் என்னை யழைத்துச்சென்று நிரூபித்தான்.

ஆன:—இருக்கட்டும், அவளை மணம் செய்தவன் உன்காதலனாகிய மைத்துனன் என்றே எப்படி நிரூபித்தான்?

அம்:—அவருடைய புகைப்படத்தைக்கொண்டே நிரூபித்தான். அவரை மணம்புரிந்த மாதும் அந்தப் புகைப்படத்திலுள்ள மனிதனே தன்னை மணம் புரிந்தவனென்று கூறினான்.

ஆன:—இது அடியோடு பொய். மிக்க சாமார்த்தியமாய் உன்னை யேமாற்ற யாரோ ஒரு கள்ளப்பயலுக்குக் குரு வேடந்தரித்து இப்படிச் செய்திருக்கிறார்கள். அந்த ஸ்திரீயும் காசுக்காசைப்பட்டு அம்மாதிரி ஒப்புக்கொள்ளச் சம்மதித்த ஒரு அயோக்கிய ஸ்திரீயே. நான் கூறிய மற்ற விஷயங்களைப்போலவே இதுவும் உண்மையென்று பூரணமாய் நம்பிக்கொள். மனோகரன் மிக்க சத்தியவான். அவன் உன்னைச் சத்தியமாய்க் காதலித்திருக்கிறான். ஒருபோதும் துரோகம் செய்யக் கனவிலும் நினைக்கமாட்டான்.

அம்:—நீ யொரு தேவதூதனே யென்று நம்புகிறேன்.

ஆன:—நான் உண்மையைக் கூறவந்தவனேயன்றி வேறில்லை. இருக்கட்டும். அப்புறம் நடந்த சங்கதிகளைக் கூறுபார்ப்போம். நீ சவம்போல் கிடக்கச் செய்ததற்குக் கறுப்பண்ணன் என்ன காரணம் கூறுகிறான்?

அம்:—என் காதலா எனக்குப் பாஷாணம் கொடுத்துவிட்டதாகவும் மலையாளத்தான் அதற்கு முறிப்புகொடுத்து என்னைக் காப்பாற்றியதாகவும் கூறினான்.

ஆன:—அடடா பரமசண்டாளர்களே! அப்புறம் கூறு.

அம்:—என் காதலர் கொண்டுவந்த கிச்சிலிப்பழத்தைப் புசித்தேன்; அப்புறம் எனக்கு ஒன்றும் தெரியாது.

(தொடரும்) ஆரணி-குப்புசாமி முதலியார்.

## ஓர் ஆரோக்யபானம்.

காபி யருந்துவதால் அடையும் குற்றங்களை நம தானந்தபோதினி மூலமாயும் இன்னும் அநேக பத்திரிகைவாயிலாயும் நண்பர்கள் நன்கு அறிந்திருக்கலாம்; அதற்கு வேறு பானங்களும் இவ்வானந்தபோதினியே குறித்திருக்கின்றது. ஆயினும் யானும் என் நண்பர்களும் கையாண்டு வரும் ஓர் பான முறையை நானும் எழுதுகிறேன்.

காபி விதைக்குப் பதிலாகத் தேற்றான் விதையை (காபி விதையைப் போலவே, வறுத்துத் தூள்செய்து) உபயோகிக்கலாம். இதனால், நீர் ரோகம், பித்தம், வாய்வு முதலியவை நீங்குவதுடன் உடம்புக்குக் குளிர்ச்சியும் ரத்தசுத்தியும் உண்டாகும். இது ஓர் பெரியோரின் அரியமுறை. (ருசியும் காபியைப்போன்றதே)

சி. தே. சுந்தரராஜ அய்யங்கார், தேவகோட்டை.

---

## பொது சமாச்சாரங்கள்.

உலகத்திலுள்ள பெரிய பாலம்:—இது ஹட்ஸன் என்னும் குடாக் கடலை இக்கரையிலிருந்து அக்கரைவரை கடக்கக்கூடிய பாலம். நியூ ஜெர்ஸி என்னும் இந்தப் பாலம் வாஷிங்டன் கோட்டைக்கும், நியூயார்க பட்டணத்திற்கும் லீ கோட்டைக்கும் மத்தியில் போடப்பட்டு பிரமிக்கச் செய்யக்கூடியதும் பெரியதுமாயிருக்குமாம். இதற்குச் செலவு 40,000,000 டாலர்கள் பிடிக்குமாம். இச்செலவை சுங்கவசூல் வரும்படியால் செலவழிக்கவேண்டுமாம். இப்பொழுது ஸ்தாபிக்கப்படும் நியூ ஜெர்ஸியின் பக்கம் நியூயார்க் கோடியைவிட சுமார 50 அடி உயரமாம். இதற்குப் பாலிஸேட்ஸ் பாறையைத் துளைத்து வேலை செய்யவேண்டியதாய் நேரிடும். *

கண்ணாடிக்கருவி.—டாக்டர் வ்ரெடெர்ன்பாக் என்பவர் இங்கிலாந்திற்காகக் கண்டுபிடித்திருக்கும் ஆச்சரியமான கருவி வளையக்கூடியதான கண்ணாடிக்கருவி. கண்ணாடி தூளாக உடையக்கூடியதல்ல. சாதாரண கண்ணாடியைக்காட்டிலும் பத்துமடங்கு பளபளப்போடுகூடியது. அதைத் திராவகமாகவும் செய்துகொள்ளலாம். * * * *

ஒரு பெரியார் முடிவு:—யுத்தத்தில், 1918-ம் ஆண்டில் ஜெர்மனியர் 74-மைலுக்கப்பா லிருந்து பாரிஸ் நகரைத் தாக்குமாறு துணைசெய்த பெரிய பீரங்கியைக் கண்டுபிடித்த பண்டிதர் ராசன்பெர்கா சமீபத்தில் இறந்துபோனார். அந்தப் பீரங்கி 120-அடி நீளமுள்ளது. அதன் வாய் 17-அங்குல அகலம். ஒரு கோயிலில் விழுந்த ஒரே குண்டு 75-பேரைக் கொன்றது. * * * * *

விநோத இன்ஷியூர்:—செம்ட்சி ரோவா என்னும் ருஷியநாட்டு நடனமாது தனது கால்களை முப்பதினாயிரம் பவுனுக்கு இன்ஷியூர் செய்திருக்கிறாளாம. * * * * *

விஷ நிவாரணக்கல்:—யாழ்ப்பாணம் புளியந்தீவு போலிஸ் டேஷனில் விஷம் உறிஞ்சும் கல்லொன்று இருக்கிறதாம் அது பாம்பு கடித்தவர்களைக் குணப்படுத்துகிறதாம். * * *

ஓர் மலையசைவு:—ஸ்வித்ஸர்லாந்தில் ஒரு மலை வருஷத்தில் நாலங்குலம் வீதம் நகர்ந்துகொண்டிருக்கிறதாம். ஐயாயிரம் அடி ஆழமுள்ள அது ஒரு பெரிய பள்ளத்தாக்கில் வந்து விழுந்துவிடுமென்று பூதத்வ சாஸ்திரிகள் சொல்லுகிறார்கள். * * * *

“ஆனந்தபோதினி” பஞ்சாங்கம்

அக்ஷய௵ ஆடிமீ—கலியுகாதி 5028, சாலிவாகனம் 1849

பசலி 1336—கோல்லமாண்டு 1101—ஹிஜரி 1345,

இங்கிலீஷ் 1926௵ ஜூலைமீ—ஆகஸ்ட்மீ

| ஆடி | ஜூலைமீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | வெ | சஷ்29-43 | உத்17-8 | சித்17-8அ | தக்ஷிணாயன புண்யகாலம் 10-40 வரை |
| 2 | 17 | சனி | சப்34-23 | அஸ்23-35 | மர60 | கரிநாள், மரணயோகம் |
| 3 | 18 | ஞா | அ37-48 | சித்28-43 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 4 | 19 | திங் | நவ39-13 | சுவா32-8 | அ32-8ம | |
| 5 | 20 | செவ் | தச38-53 | விசா33-53 | ம33-53சி | லட்சுமி விரத ஆரம்பம் |
| 6 | 21 | புத | ஏ36-40 | அனு33-40 | சித்60 | சர்வ மத்வ ஏகாதசி |
| 7 | 22 | வியா | து32-43 | கேட்31-35 | பி31-35சி | பிரதோஷம் |
| 8 | 23 | வெ | திர27-0 | மூலம்27-53 | அ27-53பி | 12-க்குள் மழை |
| 9 | 24 | சனி | ச○19-58 | பூரா22-45 | சித்60 | அவமாகம், பௌர்ணமி |
| 10 | 25 | ஞா | பவு11-58 | உத்16-45 | அமி60 | |
| 11 | 26 | திங் | பிர3-15<br>து54-25 | திரு10-8 | அ10-8சித் | |
| 12 | 27 | செவ் | திரி45-40 | அவி3-18<br>சதை56-38 | சித்3-18ம | |
| 13 | 28 | புத | சது37-30 | பூரட்50-43 | அமி60 | |
| 14 | 29 | வியா | பஞ்30-5 | உத்45-40 | சித்60 | |
| 15 | 30 | வெ | சஷ்24-0 | ரேவ41-55 | அமி60 | |
| 16 | 31 | சனி | சப்19-18 | அஸ்39-40 | சித்60 | |
| 17 | 1 | ஞா | அ16-8 | பர38-55 | சித்60 | |
| 18 | 2 | திங் | நவ14-35 | கிரு✲39-48 | சி39-48அ | கிருத்திகை |
| 19 | 3 | செ | தச14-40 | ரோ42-18 | அ42-18சி | யாத்ரை, பிரயாணம் நீக்க |
| 20 | 4 | புத | ஏ16-13 | மிரு46-5 | சித்60 | கரிநாள், சர்வ மத்வ ஏகா |
| 21 | 5 | வியா | து19-3 | திரு 51-0 | மர51-0அ | பிரதோஷம் [தசி |
| 22 | 6 | வெ | திர22-55 | புன57-0 | சித்57-0ம | மாச சிவராத்திரி |
| 23 | 7 | சனி | சது27-48 | பூச60 | சித்60 | திருதினஸ்பிருக் |
| 24 | 8 | ஞா | ●33-20 | பூச3-43 | சித்60 | சர்வத்ர அமாவாசை |
| 25 | 9 | திங் | பி39-18 | ஆயி10-58 | சி10-58ம | சிராவணசுத்தம் |
| 26 | 10 | செவ் | துதி45-28 | மக18-30 | சித்60 | சந்திரதரிசனம் 4-ம் பிறைபோல் தெரியும் |
| 27 | 11 | புத | திரி51-38 | பூர26-5 | அமி60 | ஆடிப்பூரம், மதுஸ்ரவா |
| 28 | 12 | வியா | சது57-25 | உத்33-28 | ம33-28சி | மாசசதுர்த்தி விரதம் |
| 29 | 13 | வெ | பஞ்60 | அஸ்40-18 | அ40-18சி | திருதினஸ்பிருக் |
| 30 | 14 | சனி | பஞ்2-33 | சித்46-18 | ம46-18அ | சஷ்டி, 12-க்குள் மழை |
| 31 | 15 | ஞா | சஷ்6-43 | சுவா51-10 | சி51-10ம | சூரியசஷ்டி, பும்சவனம் |
| 32 | 16 | திங் | சப்9-23 | விசா54-23 | ம54-23சி | மக கார்த்திகை 19-5 |

1926௵ ஆகஸ்ட்மீ

| | | | |
|---|---|---|---|
| செ | | சுக் | ராகு |
| குரு | 3உ மிது-சுக்<br>4,, மே-செ<br>28,, மக-குரு<br>28,, கட-சுக் | | கு-பு |
| கே | | சனி | |

Printed & Published by N. Munisawmi Mudaliar at the "Ananda Bodhini" Power Press, 15, Venkatesa Maistry St., Madras.